ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி—2

ஸ்ரீ:

ஸ்ரீ குலசேகர ஆழ்வார் அருளிய

# ஸ்ரீ முகுந்த மாலை

ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும்



ப்ரூஹி முகுந்தேதி—ர ஸனே, ப்ரூஹி முகுந்தேதி
கேசவ மாதவ கோவிந்தேதி க்ருஷ்ணனந்த ஸதானந்தேதி (ப்ரூஹி)
ராதாரமண ஹரே ராமேதி ராஜீவாக்ஷ கனஶ்யாமேதி (ப்ரூஹி)

—ஸ்ரீ ஸதாசிவ பிரஹ்மம்

ஸ்ரீ ராமஜயம்

ஸ்ரீ காமகோடி கிரந்தாவளி : 6

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் இயற்றிய

# ஸ்ரீ முகுந்தமாலை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடனும்

சீகாழி ஸாஹித்யவல்லப
டி. சுந்தராசார்ய ஸ்வாமிகள், பி.ஏ., பி.எல்.
செய்த தமிழ் மொழிப்பெயர்ப்புடனும்
குறிப்புரையுடனும் கூடியது

ஆறும் பதிப்பு

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
4, பிரான்ஸிஸ் ஜோஸப்பு தெரு, சென்னை-1.

பதிப்புரிமை] 1971 [விலை 60 பைசா

श्रीकामकोटिग्रन्थावलिः ६

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमन्महाराज-कुलशेखरदिव्यसूरिकृता

# ॥ श्रीमुकुन्दमाला ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्य-श्रीकाञ्ची-कामकोटिपीठाधिप-जगद्गुरु-
श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वतीश्रीपादानां श्रीमुखेन
समुद्भासिता



श्रीकामकोटिर्विजयते

षष्ठं संस्करणम्

श्रीकामकोटि-कोशस्थानेन प्रकाशितम्
मान्लिस् जोसफ् वीथी, चेन्नपुरी-1.



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்திர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

|| श्रीः ||

मुद्रा

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य-श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-श्रीकाञ्ची-कामकोटिपीठाधिप-श्रीजगद्गुरु-श्रीमच्चन्द्रशेखरेन्द्र-सरस्वतीश्रीपादैः क्रियते नारायणस्मृतिः ।

श्रीकामकोटिकोशस्थानान्मुद्राप्य प्रकाशयिष्यमाणः श्रीभगवद्गुणवर्णनपटीयान् भक्तिरससर्वस्वः ऐहिकामुष्मिकश्रेयोनिदानं सरलमधुरपदवाक्यरमणीयश्च मुकुन्दमालाख्यः स्तुतिरूपो ग्रन्थः पठितॄणां श्रोतॄणां च अभीप्सितसर्वार्थसिद्धिप्रदो भूयादित्याशास्महे ॥

मुकामः
श्रीगजारण्यक्षेत्रम् (तिरुवानैक्कावल्)
श्रीशा०शके १८६५
सुभानु सं० भाद्रपदशु० ९.

इति
नारायणस्मृतिः ।

ஸ்ரீ:

முத்திரை

ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யவர்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்களினுல் பிரதிஷ்டை செய்யப் பெற்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதீச்வரர்களான ஸ்ரீஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்திலிருந்து அச்சிட்டு வெளியிடப்படுகின்றதாய் ஸ்ரீ பகவானுடைய குணங்களை வர்ணிப்பதிலே திறமை வாய்ந்ததும் பக்தி ரஸமெல்லாம் நிறைந்த நிதியானதும் இகபர நன்மைகளை அளிப்பதும் ஸரஸமாயும் மதுரமாயுமுள்ள பதங்களாலும் வாக்யங்களாலும் ரமணீயமானதுமான முகுந்த மாலா என்னும் ஸ்துதி ரூபமான நூலானது படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் அவரவர்கள் விரும்பிய எல்லாப் புருஷார்த்தங்களையும் பெறும்படி அமைவதாகுக என்று ஆசீர்வதிக்கின்றோம்.

முகாம் : ஸ்ரீகஜாரண்யக்ஷேத்ரம்
(திருவானைக்காவல்)
ஸ்ரீசாலிவாஹனசகம் 1865
ஸ்வபானு ஸம்-பாத்ரபத
சுத்த நவமி. [8-9-1943]

நாராயண ஸ்ம்ருதி:

# முகவுரை

தென்மொழியில் பெருமாள் திருமொழியையும் வடமொழியில் முகுந்தமாலையையும் திருவாய்மலர்ந் தருளியவர் ஸ்ரீ குலசேகரப் பெருமாள். இவர் சுமார் 14 நூற்றாண்டுகளுக்கு முன் கோழிக்கோடு என்னும் இடத்தில் அரசாண்டு வந்த ஒரு விஷ்ணு பக்த சிரோமணியென்று இவர் ஆக்கிய பிரபந்தங்களிலி ருந்து ஒருவாறு அறியப்படுகிறது.

கி. பி. 11–ஆம் நூற்றாண்டில் இருந்தவரென்று நிச்சயிக்கப்படுகிற போஜ மகாராஜன் காலத்திற்கு வெகு முந்தி முதலே பக்தி என்பது ச்ருங்காரம் முதலியவற்றைப்போல் தனித்து ஓர் ரஸமென்று ப்ரஸித்தி பெற்றுள்ளது. இந்த ரஸத்தை முக்யமாகக் கொண்டு பாடப்பெற்ற ப்ரபந்தங்களில் முகுந்தமாலை மிக சிறப்புடையதாகும் 17-ஆம் நூற்றாண்டில் இருந் தவரென்று தெரியவருகிற ராகவானந்தர் என்பவர் விஸ்தாரமான உரையொன்றை வடமொழியில் இதற்குப் பணித்துள்ளார். அவ்வுரையையே முக்கிய ஆதாரமாகக்கொண்டு இதற்கு என்னால் தமிழில் ஒரு மொழிபெயர்ப்பும், அதன் கீழே சில விசேஷக் குறிப்புகளும் எழுதப்பட்டுள்ளன. ஸ்ரீ உ வே. பிரதி வாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் அருளப்பட்டுள்ள தமிழ் உரை ஒன்றையும் சிற்சில இடங்களில் நான் உதவியாகக் கொண்டதுண்டு.

மொழிபெயர்ப்பு சிறிது இடங்களில் சற்று விளக்க மாகவே செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பில் காணப் பட்ட ச்லோகங்களுக்குத் தமிழில் விரித்து மொழி பெயர்க்காமல் பல இடங்களில் விட்டுவிட நேர்ந்தது,

புத்தகம் விரிந்து விடும் என்கிற பயத்தால்; அக்குறை யைப் பொறுக்குமாறு இதைப் படிப்போர்கள் வேண் டப்படுகிறார்கள்.

இப்புத்தகத்தை எழுதும்படி என்னைத் தூண்டித் தக்க உதவி புரிந்தவர் என் நண்பர் ஸ்ரீ Dr. V. ராகவன், எம்.ஏ., பி.எச்.டி. எழுதும் யோக்கி யதையை எனக்கு உண்டாகும்படி அநுக்ரஹித்து அருளியவர்கள் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி களாக எழுந்தருளியிருக்கும் ஸாக்ஷாத் ஸ்ரீ சங்கரா சார்ய ஸ்வாமிகள். இம்மொழிபெயர்ப்பிலுள்ள தோஷங்களுக்கெல்லாம் என் அறியாமையும், எவை யாவது குணங்கள் இருந்தால் அவற்றிற்கு அந்த ஸ்வாமிகளின் அநுக்ரஹமும் காரணங்கள்.

தி. சுந்தராசார்யர்

ஸ்ரீ:

# ஸ்ரீ முகுந்தமாலைத் தோத்திரம்

—∞—

वन्दे मुकुन्दमरविन्ददलायताक्षं कुन्देन्दुशङ्खदशनं शिशुगोपवेषम् ।
इन्द्रादिदेवगणवन्दितपादपीठं बृन्दावनालयमहं वसुदेवसूनुम् ॥

1. வந்தே முகுந்தமரவிந்த தலாயதாக்ஷம்
குந்தேந்து சங்கதசநம் சிசுகோபவேஷம்,
இந்த்ராதி தேவகண வந்தித பாதபீடம்
ப்ருந்தாவநாலயமஹம் வஸுதேவஸூநும்.

தாமரை மலர்போல் நீண்ட கண்களையுடையவரும் குந்த புஷ்பம், சந்திரன், சங்கு இவற்றையொத்த பற்களையுடையவரும், இந்திரன் முதலான தேவர் கூட்டங்களால் வணங்கப்பெற்ற பாதபீடத்தையுடையவரும், பிருந்தாவனத்தை வாஸஸ்தானமாகவுடையவரும், இடைக் குழந்தை வேஷம் தரித்தவரும், வஸுதேவருக்குப்புத்திரருமான ஸ்ரீமுகுந்தரை நான் நமஸ்கரிக்கின்றேன். 1

श्रीवल्लभेति वरदेति दयापरेति भक्तप्रियेति भवलुण्ठनकोविदेति ।
नाथेति नागशयनेति जगन्निवासेत्यालापनं प्रतिपदं कुरु मे मुकुन्द ॥

2. ஸ்ரீவல்லபேதி வரதேதி தயாபரேதி
பக்தப்ரியேதி பவலுண்டநகோவிதேதி,
நாதேதி நாகசயநேதி ஜகந்நிவாஸே-
த்யாலாபநம் ப்ரதிபதம் குரு மே முகுந்த.

ஸ்ரீதேவியின் காதலனே என்றும், வேண்டுவதைத் தருபவனே என்றும, (தீனர்களிடத்தில்) இரங்கும்

தன்மை வாய்ந்தவனே என்றும், பக்தர்களிடத்தில் அன்பு பாராட்டுகிறவனே என்றும், (அவர்களுடைய) ஸம்ஸார துக்கத்தைப் போக்க வல்லவனே என்றும், எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும் ரக்ஷிக்கின்றவனே என்றும், 'உரக மெல்லணையானே' என்றும், எல்லா உலகங்களும் தன் உதரத்திலே தங்கப்பெற்றும் தான் எல்லா உலகங்களின் உள்ளும் புறமும் வணிக்கப் பெற்றவனே என்றும், அடிக்கடி (அல்லது சொற்கள் தோறும்) நான் சொல்லும்படி, ஹே முகுந்தனே, நீ என்னைச் செய்தல்வேண்டும்.

'பகவான்' என்கிற சொல்லுக்கு முதற் பொருளாய் விளங்கும் எம்பெருமானை, 'எண்குணத்தான்' என்று சிறப்பித்துக் கூறுகிருர்ஸர்வஜ்ஞரான திருவள்ளுவரும்; ஆனல் இந்த எட்டுக் குணங்களும் ஸந்தர்ப்பாநுஸாரமாகப் பேசப்படுகின்றன. ஸ்ரீராமாயணத்தில் வாலியை வதஞ்செய்து நின்ற ஸ்ரீராமனை நோக்கிய தாரை, "த்வமப்ரமேயஶ்ச துராஸதஶ்ச ஜிதேந்த்ரியஶ்சோத்தம தார்மிகஶ்ச । அக்ஷய்யகீர்த்திஶ்ச விசக்ஷணஶ்ச க்ஷிதி க்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ: ॥" என்று எட்டுக் குணங்களைக் கூறினள். ஸம்ஸாரி ஜீவனுக்கும் ஸர்வேச்வரனுக்குமுள்ள வைலக்ஷண்யத்தை எண்ணி இக் குணங்கள், ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு: விஶோகோ விஜிகித்ஸோ (அ)பிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப.' என்று எட்டாக உபநிஷத்தில் உபதேசிக்கப்படுகின்றன. இங்கு ஸ்ரீகுலசேகர கவியோ அந்தக் குணஷ்டகத்தைப் பகவானுக்கும் பக்தருக்குமுள்ள ஸம்பந்தாதிக்யத்தை முன்னிட்டு 'ஸ்ரீவல்லபேதி' என்றவாறு பாடினர்.

குரு —எவனை முன்னேறச் செய்ய விரும்புகிருரோ அவனை நல்ல காரியங்களையும் எவனைக்கீழ்ப்படுத்த ஸங்கல்பிக்கிருரோ அவனைக் கெட்ட காரியங்களையும் செய்யும்படி செய்பவர் ஸர்வேச்வரனே என்று வேதம்

சொல்வதற்கிணங்க, இங்கே அவர் குரு (செய்) என்று வேண்டப்படுகிறார்.

**ஸ்ரீவல்லபேதி** என்று இங்கே தொடங்கியிருப்பது பெருமாளும் பிராட்டியும் சேர்ந்திருக்கையில், தாயாரான பிராட்டியை முன்னிட்டுச் செய்யப்படும் பிரார்த்தனையே தான் நிச்சயம் பலிதமாவது என்பதை அறிவிக்கின்றது.

**தயாபரேதி** என்பது 'வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்' என்றபடி, சீதையிடத்தில் அபசாரப்பட்ட காக்கை உயிர் தப்பியதையும், **நாதேதி** என்றிருப்பது 'ஹா நாத ஹா ரமாநாத வ்ரஜநாதார்த்தி நாமஶந' என்று திரௌபதி கதறியழுத பொழுது அவளுக்குப் புடைவை சுரந்த அதிசயத்தையும் நினைவூட்டுகின்றன.

**நாகஶயநேதி** – அந்த நாகத்தில் பகவான் சயனம் செய்வது அடியார்கள் மனத்தைக் கவரத்தக்கதோர் காட்சி என்று பெரியாழ்வார் திருவாய்மலர்ந்தருளுவர்:

''வெள்ளை வெள்ளத்தின்மேல் ஒரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன் மேலே'' என்று. (439)

ஸ்ரீ காளிதாஸருங்கூட 'போகிபோகாஸநாஸீநம்' என்று இதையே கொண்டாடுவர்.

**ஆலாபநம் மே குரு** என்றிருப்பது, பகவானே என் நாவாகிற ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து என் பொருட்டு இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்க வேணுமென்கிற பொருளைத்தருகிறது. ஸ்ரீவேதாந்ததேசிகன் பிரபந்தங்களில் இவ்விதப்பொருள் பரவிக்கிடக்கும்; 'நாவிஷ்ணு: கீர்த்தயேத் விஷ்ணும்' என்றுள்ள சாஸ்திரத்தையும் இது பின்பற்றியதாகும்.

**முகுந்த** என்கிற ஸம்போதனத்தால், ''உம் பெயரின் பொருளுக்கு இசைந்தவாறு நீர் எனக்கு முக்தி

யைத் தருவதைக் காட்டிலும், உம் நாமங்களை நான் சொல்லும் பாக்கியம் மேலானது'' என்பது த்வனிதம்.

அஸத்கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம்,
வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே.

'விஷய கீர்த்தனைகளைச் செய்து புழுதிக்காட்டில் புரண்டு கொண்டிருக்கும் என் சொற்களைக் கண்ணனுடைய பேச்சாகிற கங்கைநீரால் அலம்புகிறேன்' என்றுள்ள மூத்தோர் சொல் இங்கே அநுஸந்தேயம்.

**வரதேதி** - 'ஸ்மரத: பாதகமலம் ஆத்மாநமபி யச்சதி' அதாவது ஸ்ரீபகவானுடைய வரந்தரும் இயல்பின் எல்லைநிலம் தன்னை நினைப்பவர்களுக்குத் தன்னையே தருவதாகும். இந்த ரஹஸ்யம் ஸுதாமருடைய பத்னியால் ஸ்ரீபாகவதத்தில் (10-80-11) வெளியிடப்பட்டிருக்கிறது. வரதேதி என்றிருப்பதற்கு இதுவே தக்க வியாக்யானமாகிறது. 2

जयतु जयतु देवो देवकीनन्दनोऽयं
जयतु जयतु कृष्णो वृष्णिवंशप्रदीपः ।
जयतु जयतु मेघश्यामलः कोमलाङ्गो
जयतु जयतु पृथ्वीभारनाशो मुकुन्दः ॥ ३ ॥

3. ஜயது ஜயது தேவோ தேவகீநந்தநோ'யம்
ஜயது ஜயது க்ருஷ்ணோ வ்ருஷ்ணிவம்சப்ரதீப:,
ஜயது ஜயது மேகச்யாமல: கோமலாங்கோ
ஜயது ஜயது ப்ருத்வீபாரநாசோ முகுந்த:.

தேவனென்று புகழ்பெற்று என் எதிரே நிற்கும் இத் தேவகிமைந்தன் மேன்மேலும் ஜயிக்கக் கடவன்; வ்ருஷ்ணியின் குலவிளக்காய் விளங்கும் இந்த ஸ்ரீகிருஷ்ணன் மேன்மேலும் ஜயிக்கக் கடவன்; நீருண்ட

மேகத்தைப்போல் கரிய நிறத்தையும் ம்ருதுவான அவயவங்களையுமுடைய இவ்வழகன் மேன்மேலும் ஜெயிக்கக்கடவன்; பூமியின் பாரத்தைப்போக்கி, முக்தியை அளிக்கும் தன்மை வாய்ந்த இந்த முகுந்தன் மேன் மேலும் ஜயிக்கக்கடவன்.

ஸ்ரீகுலசேகரகவி பகவந்நாமங்களைக் கீர்த்தனம் செய்ய ஆரம்பித்தபோதே, ஸ்ரீமுகுந்தன் இந்தப் பக்தருக்குத் தன்னை ஒருகால் காண்பித்து நிற்க வேண்டுமென்றெண்ணி, அவர் உள்ளத்தில் ஸாக்ஷாத்கார வடிவுகொண்டு நிற்க, அதைக் கண்டதும் ஸ்ரீகுலசேகரர், 'அயம் தேவகீநந்தந.' 'இதோ இருக்கின்றாரே தேவகி மைந்தன்' என்று அளவிலா ஆனந்தமடைந்து, அவரை ஜயது, ஜயது என்று இங்கே சொல்லிப் பிரதிநந்தனம் செய்கின்றார்.

பகவானைக் கண்காணவொட்டாமல் எப்போதும் தலைவிரித்தாடி ஆரவாரஞ் செய்துகொண்டிருக்கும் விஷயப் பிசாசுகளை ஓட்டுவதற்குரிய உச்சாடன மந்திரம்போல் இச்சுலோகம் கேட்கப்படுகிறது.

'அவனை எதிர்த்து நின்று இறந்தார்க்கும் முக்தி.' இது சுகருடைய ஸூக்திகளால் ஸ்ரீபாகவதத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது:

விஜயரதகுடும்ப ஆத்ததோத்ரே
த்ருதஹயரச்மிநி தச்ச்ரியேக்ஷணீயே,
பகவதி ரதிரஸ்து மே முமூர்ஷோ:
யமிஹ நிரீக்ஷ்ய ஹதா கதா: ஸ்வரூபம்.

பூபாரத்தை ஒழிக்கவேண்டிய நிமித்தம் பகவான் ஸங்கல்பித்தபடி நிகழ்ந்த பாரத யுத்தத்தில் அர்ஜுனன் ரதத்தைத் தன் சொந்தக் குடும்பத்தைப்போல் வைத்து ரக்ஷித்துக்கொண்டு, அதிலே சாட்டையும் கடிவாளமும் கையுமாய் ஸாரத்யம் செய்த கண்ணனுடைய அழகைப் பார்த்துக் கொண்டே, அந்த ரதத்தை

எதிர்த்து யுத்தம் செய்து உயிரிழந்த வீரர்கள் அனைவரும் பகவத்ஸாரூப்யத்தை அடைந்து முக்தி பெற்றார்கள் என்பது இதன் பொருள்.

**தேவோ தேவகீநந்தந:** தேவனென்றால் விளையாடுகிறவன் என்பது பொருள். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் பகவானுடைய விளையாட்டுகளாகையால் அதே தேவ: என்கிற சொல்லுக்கு உயர்ந்த அர்த்தமாய் விளங்குகிறார். ஸஹஸ்ரநாமத்தில் 'தேவகீநந்தந: ஸ்ரஷ்டா, க்ஷிதீஶ:, பாபநாஶந:' என்று கூறப்படுகிறது. தேவகீநந்தனன் என்கிற பெயரை அடுத்து, ஸ்ரஷ்டா, க்ஷிதீஶ:, பாபநாஶந: என்கிற சொற்கள் இவ்வர்த்தத்தைப் போஷிக்கின்றன. 3

मुकुन्द मूर्ध्ना प्रणिपत्य याचे भवन्तमेकान्तमियन्तमर्थम् ।
अविस्मृतिस्त्वच्चरणारविन्दे भवे भवे मेऽस्तु भवत्प्रसादात् ॥

4. முகுந்த மூர்த்நா ப்ரணிபத்ய யாசே
பவந்த மேகாந்த மியந்தமர்த்தம்,
அவிஸ்ம்ருதிஸ்த்வச்சரணாரவிந்தே
பவே பவே மே'ஸ்து பவத்ப்ரஸாதாத்.

ஹே முகுந்தா, நான் உம்மைத் தலைவணங்கி நமஸ்கரித்து, இதற்கு இதுவே பயன் என்றிருக்கும் இவ்வளவான பிரயோஜனத்தையே பிரார்த்திக்கிறேன் உம்முடைய கிருபையாலே ஜன்மங்கள்தோறும் உம் திருவடித் தாமரைகளை மறவாமை என்பது எனக்கு இருத்தல் வேண்டும்.

முன் ச்லோகத்தில் கூறியபடி, பகவானுடைய ஸாக்ஷாத்காரத்தைப் பெற்ற கவி, அவரைப்பார்த்து, இங்கோர் வரம் கேட்கிறார். அதுவே தமக்குப் பரமோத்தேசம் அன்றி முக்தி என்பது வேண்டாம் என்று த்வனிப்பிப்பதற்காக முகுந்த என்கிற ஸம்போதனம் இங்கே செய்யப்படுகிறது.

இங்கே **அவிஸ்ம்ருதி** அல்லது மறவாமை என்றிருப்பது தேகங்கள் வந்து வந்து போய்க்கொண்டிருந்த போதிலும், அழியாமலிருக்கும் பக்தியைப் பெருக்குவதற்குரிய ஜ்ஞான விசேஷத்தைச் சொல்லுவதாகும். இதையே 'த்ருவா ஸ்ம்ருதி:' என்று உபநிஷதங்கள் உபதேசிக்கின்றன.

ஸ்ரீ ராகவானந்தர் என்பவருடைய வியாக்கியானத்துடன் கூடிய முகுந்தமாலையில் இதுவே முதல் ச்லோகமாகக் காணப்படுகிறது. இதற்கு முன்னுள்ள ச்லோகங்கள் அதில் இல்லை. அந்த வியாக்கியானத்தில் முகுந்தாஷ்டாதசாக்ஷர மந்த்ரத்தை மூலமாகக் கொண்டு இத் தோத்திரம் ஆக்கப்பட்டிருக்கிறதென்று குறிக்கப்பட்டிருக்கிறது, அம் மந்த்ரம் **ஸ்ரீமந் முகுந்தசரணௌ ஸதா ஶரணமஹம் ப்ரபத்யே** என்பதாகும்.

இந்த ச்லோகமும், இதைப்போலுள்ள வேறு பல ச்லோகங்களும் சரணாகதியின் முதல் அங்கமான **ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:** (அநுகூலத்தை விரும்புவது) என்பதைச் சொல்லுகின்றவை.

நாத யோநிஸஹஸ்ரேஷு யேஷு யேஷு பவாம்யஹம்,
தேஷு தேஷ்வச்யுதா பக்திரச்யுதாஸ்து ஸதா த்வயி.

'எப்பிறப்பை அடைந்தாலும், அதில் உன்னிடத்தில் பக்தி ஒன்றையே பிரார்த்திக்கிறேன்' என்று ப்ரஹ்லாதர் சொன்னதுபோல் இவரும் சொல்லுகிறார். 4

**श्रीमुकुन्दपदाम्भोजमधुनः परमाद्भुतम् ।**
**यत्पायिनो न मुह्यन्ति मुह्यन्ति यदपायिनः ॥ ५ ॥**

5. ஸ்ரீமுகுந்த பதாம்போஜமதுந: பரமாத்புதம்,
யத்பாயிநோ ந முஹ்யந்தி முஹ்யந்தி யதபாயிந:.

ஸ்ரீ முகுந்தனுடைய திருவடித் தாமரைகளில் உள்ள மதுவைப் பானம் செய்கிறவர்கள் மயக்கமற்று

இருக்க, அதைக் குடிக்காதவர்கள் மயக்கமுற்று இருக்கிறார்களே; இது என்ன அளவற்ற ஆச்சரியம்! 5

नाहं वन्दे तव चरणयोर्द्वन्द्वमद्वन्द्वहेतोः
कुम्भीपाकं गुरुमपि हरे नारकं नापनेतुम् ।
रम्या रामा मृदुतनुलता नन्दने नापि रन्तुम्
भावे भावे हृदयभवने भावयेयं भवन्तम् ॥ ६ ॥

6. நாஹம் வந்தே தவ சரணயோ:
த்வந்த்வமத்வந்த்வஹேதோ:
கும்பீபாகம் குருமபி ஹரே
நாரகம் நாபநேதும்,
ரம்யா ராமா ம்ருதுதநுலதா
நந்தநே நாபி ரந்தும்
பாவே பாவே ஹ்ருதயபவநே
பாவயேயம் பவந்தம்.

ஹரி என்றிருப்பவனே, உன்னுடைய இரண்டு திருவடிகளையும் வணங்குவது இரட்டைகளை ஒழிப்பதென்கிற மோக்ஷத்தின் பொருட்டன்று; நரகத்தில் உள்ள எல்லையற்ற துக்கத்தை உண்டுபண்ணக் கூடிய கும்பீபாகம் என்பதைத் தவிர்ப்பதற்காகவும் அன்று; நந்தனம் என்கிற தோட்டத்தில் மனத்திற்கினியவர்களும், ஸ்பர்ச ஸுகம் மிகுந்துள்ள கொடி போன்ற சரீரம் வாய்ந்தவர்களுமான அழகிய அப்ஸரஸுகளுடன் கூடிக் களிப்பதற்குமன்று. பின் எதற்கென்றால், பிறவிதோறும் (அல்லது எண்ணம் தோறும்) என் ஹ்ருதயம் என்கிற கோயிலில் உன்னை வைத்து நான் தியானிப்பதற்கே.

''நீர் கேட்கும் 'அவிஸ்ம்ருதி' எதற்கு உதவும்? மோக்ஷத்தைப் பெறுவதற்காவது, நரகாநுபவத்தைத் தடுப்பதற்காவது நேரே பயன்படாதாகையால்,

அவற்றைப் பெறுவதற்கல்லவோ முதலில் நீர் என்னை வழிபடவேண்டும்?'' என்று பகவான் நினைக்கக் கூடுமென்று சந்தேகித்து, நாஹம் வந்தே என்றவாறு பதில் உரைக்கிறார் இக் கவி. ''என் மனக்கோயிலில் ஸ்ரீ முகுந்தனை எழுந்தருளப் பண்ணி அவனை இடைவிடாது தியானிப்பதற்கு இன்றியமையாததான இந்த அவிஸ்ம்ருதி ஒன்றை நான் பெற்றால், மோக்ஷானந்தத்தையோ, நரக துக்கத்தையோ, ஸ்வர்க்க ஸுகத்தையோ ஒன்றையும் நான் உணரவே மாட்டேன். ஆகையால் அவை இருந்தால் என்ன? சென்றால் என்ன?'' என்று கவிகொண்ட உறுதியான ஸங்கல்பம் ச்லோகத்தில் த்வனிக்கும்.

'மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலுடன் ஆடலவை ஆதரியேன்' (682)

என்று பெருமாள் திருமொழியிலுள்ள பாசுரம் இங்கே நினைக்கத்தக்கது. 6

नास्था धर्मे न वसुनिचये नैव कामोपभोगे
यद्यद्भव्यं भवतु भगवन् पूर्वकर्मानुरूपम् ।
एतत्प्रार्थ्यं मम बहुमतं जन्मजन्मान्तरेऽपि
त्वत्पादाम्भोरुहयुगगता निश्चला भक्तिरस्तु ॥ ७ ॥

7. நாஸ்தா தர்மே நவஸுநிசயே நைவ காமோபபோகே
யத் யத் பவ்யம் பவது பகவந் பூர்வகர்மாநுரூபம்,
ஏதத் ப்ரார்த்யம் மம பஹுமதம் ஜந்மஜந்மாந்தரேபி
த்வத்பாதாம்போருஹ யுககதா நிச்சலா பக்திரஸ்து.

ஷட்குண ஸம்பூர்ணரான பகவானே! எனக்குத் தர்மத்திலும் ஈடுபாடில்லை; அவ்விதமே பொருள் சேர்ப்பதிலும் இல்லை; காம ஸுகங்களைப் பெறுவதிலோ கட்டோடு கிடையாது. முன் செய்த வினைப்படி அவ

சியமாய் வரக்கடவதான எது வந்தாலும் வரட்டும். ஆனால் என்னால் பிரார்த்திக்கத்தக்க பரிபூர்ண பிரயோஜனமாய் நிர்ணயிக்கப்பட்டது யாதெனில், இப்பிறப்பிலும் இனியுள்ள பிறப்புக்களிலும் உன்னுடைய இரண்டு திருவடித் தாமரைகளிலும் உறுதியான பக்தியொன்றே எனக்கு இருக்க வேண்டுமென்பதே.

"பூர்ணமான ஆனந்தாநுபவத்திற்கு, பக்தி, முக்தி இவ்விரண்டும் துல்யமான கௌரவத்தை உடையவையாய் இருந்தாலும், லோகம் பின்னருசியாய் இருப்பதால், நான் வேண்டுவது பக்தி ஒன்றையே தான் என்பதில் என்ன தோஷம்?" என்பது இங்கே கவியின் கருத்து என்பவர் ஸ்ரீராகவானந்தர்.

"அறம், பொருள், இன்பம், வீடு என்ற இந் நான்கே புருஷார்த்தங்கள் (அதாவது, விவேகியால் அடையப்பட வேண்டிய பிரயோஜனங்கள்) என்று ஏற்பட்டிருக்க, நீர் இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்' பக்தியையே வேண்டுகிறீரே அதெப்படி?" என்றால் பக்தி என்பது ஒரு புருஷனுடைய இயற்கையே ஆகும்; கேவலம் புருஷார்த்தம் மட்டிலுமே யன்று; ஆகையால் அது ஒன்றையே பெறுவதற்கு நான் இங்கு வேண்டுகின்றேன் என்பது இச்சுலோகத்தின் தாத்பர்யம். 7

**दिवि वा भुवि वा ममास्तु वासो नरके वा नरकान्तक प्रकामम् ॥**
**अवधीरितशारदारविन्दौ चरणौ ते मरणेऽपि चिन्तयामि ॥८॥**

8. திவி வா புவி வா மமாஸ்து வாஸோ
நரகே வா நரகாந்தக ப்ரகாமம்,
அவதீரித சாரதாரவிந்தௌ
சரணௌ தே மரணே'பி சிந்தயாமி.

நரர்களுடைய விஷயப் பற்றுக்களைப் போக்கடித்து ரக்ஷிப்பவனே, நான் ஸ்வர்க்கத்தில் வஸித்தாலென்ன?

பூமியில் வஸித்தாலென்ன? அல்லது, வேண்டுமளவு நரகத்திலேதான் கிடந்தாலென்ன? உயிர்போகும்வரையில், இளவேனிற் காலத்தில் மலரும் தாமரைப் பூவைத் தோற்கடிப்பவையான உன்னுடைய இரண்டு சரணங்களையே நினைக்கின்றவனுவேன்.

ஸ்ரீபகவத் ஸாக்ஷாத்காரத்தை அடைந்த ஸ்ரீ குலசேகரகவி, முதலாகப் பக்திக்குரிய ஞான விசேஷத்தையும், பிறகு பக்தியையும், மூன்ருவதாக அந்தப் பக்திக்குப் பலனுக நிற்கும் அநுராகத்தையும் பிரார்த்தித்து, இங்கே அவ்வநுராகம் ஆயுள் முழுவதும் தம் மனத்தை விட்டகலாமல் இருக்கவேண்டியதைப் பிரார்த்திக்கிருர்

**நரகாந்தக:**— 'நராணும் கம், வைஷயிகஸுகம், தஸ்ய அந்தம். அவஸாநம் கரோதீதி நரகாந்தக:' என்றிருக்கும் வ்யாக்யான ஸரணியைக் கொண்டு, அந்தச் சப்தம் இங்கே மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது நரகமென்ருல் ஸம்ஸாரம்; அதைப்போக்கடிப்பதால் 'நரகாந்தக:' என்று இதற்குப் பொருள் கூறி, 'தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸாரஸாகராத்' என்றுள்ள கீதா ச்லோகமும் பிரமாணமாக ஸ்ரீராகவானந்தருடைய வியாக்கியானத்தில் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. 8

**कृष्ण त्वदीयपदपङ्कजपञ्जरान्तः अद्यैव मे विशतु मानसराजहंसः ।**
**प्राणप्रयाणसमये कफवातपित्तैः कण्ठावरोधनविधौ स्मरणं कुतस्ते ॥**

9. க்ருஷ்ண த்வதீய பதபங்கஜ பஞ்ஜராந்த:
அத்யைவ மே விசது மாநஸ ராஜஹம்ஸ:,
ப்ராணப்ரயாண ஸமயே கபவாதபித்தை:
கண்டாவரோதநவிதௌ ஸ்மரணம் குதஸ்தே.

ஸ்ரீகிருஷ்ணனே, மானஸ ஸரஸில் வஸிக்கும் ராஜஹம்ஸம்போல் என் மனத்திலே குடிகொண்டிருக்கும் பாவனு விசேஷமானது (அந்தரங்கப்ரீதியானது)

இன்றைக்கே தாமரைக் கூடென இருக்கும் உன் திருவடிகளை அடைந்துவிடட்டும் (ஏனெனில்,) வாத பித்த சிலேஷ்மங்கள் நெஞ்சடைக்கும் வகையுற்ற உயிர் போகும் அத்தருணத்தில் நான் உன்னை நினைப்பது எங்கே?

இறக்கும் காலத்தில் எந்த பாவனையை ஒருவன் ஸ்மரிக்கிறானோ, அதையே அவன் மறுபிறவியில் அடைகிறான் என்று சாஸ்திரம் இருந்தாலும், அந்தச் சாஸ்திரத்தை விளம்பியவர் ஸ்ரீகிருஷ்ணனே யாதலால் ஸ்ரீ குலசேகரர் ஸ்ரீ கிருஷ்ணனே என்று ஸாபிப்பிராயமாக ஸம்போதனம் செய்து, அந்திமஸ்ம்ருதி என்பது அதிதுர்பலமாகையாலே இன்றைக்கே அதன் பயன் எனக்குக் கிடைத்துவிடும்படி அநுக்கிரஹிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறார். 9

चिन्तयामि हरिमेव सन्ततं मन्दमन्दहसिताननाम्बुजम् ।
नन्दगोपतनयं परात्परं नारदादिमुनिबृन्दवन्दितम् ॥ १० ॥

10 சிந்தயாமி ஹரிமேவ ஸந்ததம்
மந்த மந்தஹஸிதாநநாம்புஜம்,
நந்தகோபதநயம் பராத்பரம்
நாரதாதி முநிப்ருந்தவந்திதம்.

சிறிது சிறிது புன்னகையுடன் கூடிய முகத்தாமரையை யுடையவனாய், நாரதர் முதலிய முனிவர்க்கங்களால் ஸேவிக்கப் பெற்றவனாய், மேலோர்க்கும் மேலோனாய் விளங்கும் நந்தகோபாலர் மகனைகத் தன்னைக் காட்டி என் மனத்தை அபஹரிக்கும் இந்த ஹரியையே நான் இடைவிடாது நினைக்கிறேன்.

இந்த ஶ்லோகம், 'தைலதாராவத் அவிச்சிந்நஸ்ம்ருதி ஸந்தாந ரூபா' என்ற எண்ணெய்த் தாரையைப்போல் இடைவெளியற்ற ஞாபகரூபமான தியா

னத்தைக் குறிப்பிடுகிறது. அவ்விதத் தியானம் நிலை பெறுவதற்கு ஸ்ரீகிருஷ்ண ரூபியான பகவான் இன்றியமையாத அவலம்பனம் என்பதையும் த்வனிப்பிக்கின்றது. ஸ்ரீகிருஷ்ணனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் ஸௌந்தர்யம் மனத்திற்கு இயல்பாயுள்ள சாஞ்சல்யத்தை ஒழித்துத் தன்னிடம் அதை இழுக்கும் ஸ்வபாவமுள்ளதாகையால், இதை 'தாரணாத்யான மங்களம்' என்று விசேஷிப்பர் ஸ்ரீசுகர்.

**करचरणसरोजे कान्तिमन्नेत्रमीने**
**श्रममुषि भुजवीचिव्याकुलेऽगाधमार्गे ।**
**हरिसरसि विगाह्यापीय तेजोजलौघं**
**भवमरुपरिखिन्नः खेदमद्य त्यजामि ॥ ११ ॥**

11. கரசரணஸரோஜே காந்திமந் நேத்ரமீநே
ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே'காதமார்கே,
ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோஜலௌகம்
பவமருபரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி.

திருக்கைகள், திருவடிகள் என்ற தாமரைப் புஷ்பங்களை யுடையதும், பிரகாசிக்கும் விழிகளான மீன்கள் சஞ்சரிக்கப் பெற்றதும், அடியார்கள் அறியாமலே அவர்களது ஸம்ஸார தாபத்தைத் தணிப்பதும், தோள்களாகிற அலைகளால் வியாபிக்கப்பட்டதும், நிலையிலாத ஆழமுள்ளதுமான ஹரியாகிய ஏரியில் நீராடி, அதிலுள்ள அவருடைய காந்திமயமான ஜலப் பிரவாகத்தை அள்ளிக் குடித்து, பிறப்பென்ற பாலைவன நடமாட்டத்தால் சோர்வுற்ற நான் இன்று என் களைப்பைப் போக்கிக் கொள்கிறேன்.

ஸமுத்திரம்போல் எல்லையற்று அகண்டமாய்ப் பிரகாசிக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைத் தம்முடைய

பக்தி மிகுதியால் கரசரண விசிஷ்டரான ஹரி என்னும் ஓர் மடுவாகத் தேக்கி, அதில் ஸ்நானபானங்களைச் செய்வதாலே ஸம்ஸார தாபங்கள் அனைத்தையும் போக்கடித்துக் கொள்கிறார். இவர் பக்தி யதிசயத்தால் பெற்ற நிலையை,

நாஹம் வேதை: ந தபஸா ந தாநேந ந சேஜ்யயா,
சக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம் யதா.
பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம்விதோர்'ஜுந,
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப.

என்றுள்ள கீதா (11-53-54) ச்லோகங்கள் வர்ணிக்கின்றன. 11

सरसिजनयने सशङ्खचक्रे मुरभिदि मा विरमस्व चित्त रन्तुम् ।
सुखतरमपरं न जातु जाने हरिचरणस्मरणामृतेन तुल्यम् ॥१२॥

12. ஸரஸிஜநயநே ஸசங்கசக்ரே
முரபிதி மா விரமஸ்வ சித்த ரந்தும்,
ஸுகதரமபரம் ந ஜாது ஜாநே
ஹரிசரண ஸ்மரணாம்ருதேந துல்யம்.

தாமரை மலர் போல் (நித்யஸுபகமாய்) இருக்கும் கண்களை யுடையவனும், சங்கு சக்கரங்களைத் தரித்தவனுமான இந்த முராஸுரமர்த்தனனிடத்தில், என் நெஞ்சமே! நீ கூடியிருந்து ஆனந்திப்பதை விட்டொழியாதே ஹரியின் பாதங்களைத் தியானிப்பது என்கிற அமிருதத்திற்கு ஒப்புயர்வுள்ளதாக வேறெந்தச் சுகத்தையும் நான் ஒருபோதும் அறியேன்.

'ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்து: ஆத்மைவ ரிபுராத்மந:' என்றபடி ஒருவனுக்கு மனமே பந்துவைப் போல் நன்மை பயக்கத்தக்கதாயும், சத்துருவைப் போல் தீமை விளைவிப்பதாகவும் இருப்பதால், அதைக் குறித்து நல்ல உபதேசம் இங்கே செய்யப்படுகிறது.

'மநோஜாதி ரநாதீநா ஸுகேஷ்வேவ ப்ரவர்த்ததே' என்றபடி இன்பத்தை நாடுவதே மனத்திற்கு இயல்பாதலால், ஹரிஸ்மரணத்தை விட மேலான இன்பம் ஒன்றும் கிடையாது என்று இங்கே கூறப்பட்டிருக்கிறது.

ஸரஸிஜநயநே என்பதால் ஸௌந்தர்யாதிசயமும், அருளும், ஸஶங்கசக்ரே என்பதால் ஆபன்னர்களைக் காப்பதிலுள்ள அக்கரையும், முரபிதி என்பதால் ரக்ஷிப்பதற்கு இசைந்த சாமார்த்தியமும் உணர்த்தப்படுகின்றன.

'ஶ்ரவணம் கீர்த்தநம் விஷ்ணோ: ஸ்மரணம்' என்றபடிக்குள்ள ஒன்பது விதமான பக்தியையும் இந்த ஸ்தோத்திரம் அங்கங்கே விஷயீகரித்தாலுங்கூட விசேஷித்து ஸ்மரண பக்தியையும் நாம ஸங்கீர்த்தனத்தையும் கூறுகின்றது என்பது குறிப்பிட த்தக்கது. 12

मा भीर्मन्द मनो विचिन्त्य बहुधा यामीश्चिरं यातनाः
नामी नः प्रभवन्ति पापरिपवस्स्वामी ननु श्रीधरः ।
आलस्यं व्यपनीय भक्तिसुलभं ध्यायस्व नारायणं
लोकस्य व्यसनापनोदनकरो दासस्य किं न क्षमः ॥ १३ ॥

13. மாபீர் மந்த மநோ விசிந்த்ய பஹுதா
யாமீச்சிரம் யாதநா:
நாமீ ந: ப்ரபவந்தி பாபரிபவஸ்
ஸ்வாமீ நநு ஸ்ரீதர:,
ஆலஸ்யம் வ்யபநீய பக்திஸுலபம்
த்யாயஸ்வ நாராயணம்
லோகஸ்ய வ்யஸநாபநோதநகரோ
தாஸஸ்ய கிம் ந க்ஷம:.

இயமனால் ஏற்படக்கூடும் வேதனைகளையே பலவாறாய் எப்பொழுது பார்த்தாலும் எண்ணமிட்டுக்

கொண்டிருக்கும் என் மட மனமே! நீ பயப்படாதே, பாவிகள் விஷயத்தில் சத்துருக்களைப்போல நடக்கும் அந்த இயமகிங்கரர்கள் நம்மிடத்தில் செல்வாக்கற்றவர்களே. ஏனெனில் லக்ஷ்மீ தேவியை மார்பில் தரித்துக் கொண்டிருக்கும் இவனல்லவா நமக்கு இறைவன்? (ஆகையால்) அசட்டையை அடியோடு ஒழித்து, பக்தியினால் மிக எளிதில் அடையக் கூடியவனாய் நர ஸமூஹங்களுக்கு ஆச்ரயமாய் விளங்குவதால் நாராயணன் என்றிருக்கும் இவனைத் தியானம் செய். உலகத்தினுடைய தீமைகளையே போக்கடிக்கும் இவன் தன்னுடைய அடியார்களின் துயரங்களையா தீர்க்க வல்லமையற்று இருப்பான்?

**ஸ்வாமீ நநு ஸ்ரீதர:** என்பதிலுள்ள விசேஷம் 'பகவான் நம் பாவங்களை எண்ணி ரக்ஷிப்பதற்கு இஷ்டப்படாவிட்டாலும், அவர் தம் மார்பிலே தரித்துக் கொண்டிருக்கும் லோகமாதாவான லக்ஷ்மீதேவி தக்க நியாயங்களைக் கூறி அவரைக் கட்டாயம் ரக்ஷிக்கும்படி செய்வாள்' என்பதே. 13

**भवजलधिगतानां द्वन्द्ववाताहतानां**
**सुतदुहितृकलत्रत्राणभारार्दितानाम् ।**
**विषमविषयतोये मज्जतामप्लवानां**
**भवतु शरणमेको विष्णुपोतो नराणाम् ॥ १४ ॥**

14. பவஜலதிகதாநாம் த்வந்த்வவாதாஹதாநாம்
ஸுததுஹித்ருகலத்ரத்ராண பாரார்திதாநாம்,
விஷமவிஷயதோயே மஜ்ஜதாமப்லவாநாம்
பவது சரணமேகோ விஷ்ணுபோதோ நராணாம்.

காமக் குரோதங்களாகிற காற்றுகளால் அலைக்கப்பட்டு, மகன், மகள், மனைவி என்ற இவர்களை ரக்ஷிக்கும் சுமையுடன் துக்கம் நிரம்பியுள்ள விஷயங்களாகிற ஜலத்தையுடைய ஸம்ஸார ஸாகரத்தையடைந்து,

புணையொன்றும் பெருது அதில் மூழ்கிக் கொண்டிருக்கும் இந்த மனிதர்களுக்கு விஷ்ணு என்ற மரக்கலமொன்றே அடைக்கலமாய் ஆகட்டும்.

சமுத்திரத்தில் கப்பலில்லாமல் தத்தளித்துக் கொண்டிருக்கும் ஒருவன் த்ருடமான கப்பல் ஒன்றை அடைந்து, அதில் ஏறின பிறகு புயல் முதலியவற்றிற்கு அஞ்சாமல், அதே சமுத்திரத்தில் எப்படி வெகு ஸந்தோஷமாய் ஸஞ்சரிப்பானோ, அதே விதமாகப் பகவானை அடைந்த பிறகு எத்தனை ஸம்ஸாரம் இருந்தாலும் அதில் இருப்பதால் தீங்கொன்றும் வாராதென்பது இங்கே கருத்து. 'த்வயா ஹி குப்தா விசரந்தி நிர்பயா: விநாயகாநீகபமூர்தஸு ப்ரபோ.' அதாவது, 'பகவானை அடைந்தவர்கள் அவனால் நாற்புறமும் ரக்ஷிக்கப்பட்டவர்களாய் இடையூறுகளின் தலைகளை மிதித்துக்கொண்டு நிர்ப்பயமாய் எங்கும் ஸஞ்சரிப்பார்கள்' என்றுள்ள ஸ்ரீசுகருடைய ஸூக்தி இதற்குப் பிரமாணம்.

**விஷ்ணுபோத:** என்பதிலுள்ள ஸ்வாரஸ்யம். விஷ்ணு என்ற சொல் வ்யாப்தியைக் குறிக்குமாகையால் அவராகிய கப்பல் மிகப் பெருமை பெற்றதாய் எத்தகைய காற்றுகள் அடித்தாலும் அசையாமல், எவ்வளவு பாரங்கள் வைத்தாலும் அவற்றைத்தாங்கி, எவ்வளவு கொந்தளிப்புள்ள கடலானாலும் அதைப் பொருட்படுத்தாமல், எத்தனைபேர் ஏறினாலும் இடங் கொடுப்பதாய் இருக்கும்.

**भवजलधिमगाधं दुस्तरं निस्तरेयं**
**कथमहमिति चेतो मा स्म गाः कातरत्वम् ।**
**सरसिजदृशि देवे तावकी भक्तिरेका**
**नरकभिदि निषण्णा तारयिष्यत्यवश्यम् ॥ १५ ॥**

15. பவஜலதிமகாதம் துஸ்தரம் நிஸ்தரேயம்
கதமஹமிதி சேதோ மா ஸ்ம கா: காதரத்வம்,
ஸரஸிஜத்ருசி தேவே தாவகீ பக்திரேகா
நரகபிதி நிஷண்ணா தாரயிஷ்யத்யவச்யம்.

ஓ மனமே! அளவற்ற ஆழமுள்ளதாய், தாண்டுவதற்கரிய இப்பிறவிக்கடலை எவ்வாறு தாண்டுவது என்று நீ அச்சமுறல் வேண்டாம். நரகனை வதைத்த அந்தத் தாமரைக் கண்ணனை தேவனிடத்தில் வைக்கப்பட்ட உன்னுடைய பக்தியே உன்னை நிச்சயமாய்த் தாண்ட வைக்கும்.

**ஸரஸிஜத்ருஶி தேவே** ஸர்வேச்வரன் தன் பார்வையாலேயே இவ்வுலகத்தை உண்டாக்கி, அதை அநுக்ரஹிக்கும் வல்லமை பெற்றவர். ஆகையால் பிறவிக்கடலைத் தாண்டவைப்பது அவருக்கோர் பெரிதன்று. அவருடைய கடாக்ஷலேசாநுலேசமே போதுமானது.

**நரகபிதி** ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டும் போது ஒரு சேதனனுக்கு வரக்கூடிய இடையூறுகளை நீக்குவது, நரகாசுரனையே வென்ற இவருக்கு மிக எளிதேயாகும் என்பதை இவ் விசேஷணம் குறிக்கும்.

**ஏகா தாரயிஷ்யதி** என்பதால் 'நாந்ய: பந்தா அயநாய வித்யதே' என்றபடி பகவத் பக்தி ஒன்று தவிர மற்ற எதுவும் இவ்விதம் செய்விக்கச் சக்தியற்றது என்பது த்வனிதமாகும். 'தாரயிஷ்யத்யவஶ்யம்' சரணாகதியின் ஓர் அங்கமான 'ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸ:' என்பது இதனால் உணர்த்தப் பெற்றது.

तृष्णातोये मदनपवनोद्धूतमोहोर्मिमाले
दारावर्ते तनयसहजग्राहसङ्घाकुले च ।

संसाराख्ये महति जलधौ मज्जतां नस्त्रिधामन्
पादाम्भोजे वरद भवतो भक्तिनावं प्रयच्छ ॥ १६ ॥

16. த்ருஷ்ணுதோயே மதநபவநோத்தூத-
மோஹோர்மிமாலே
தாராவர்த்தே தநயஸஹஜ-
க்ராஹ ஸங்காகுலே ச,
ஸம்ஸாராக்யே மஹதி ஜலதௌ
மஜ்ஜதாம் நஸ் த்ரிதாமந்
பாதாம்போஜே வரத பவதோ
பக்திநாவம் ப்ரயச்ச.

'விஷயாநுபவத்தில் இச்சை' என்ற நீருடையதும் காமன் என்ற காற்றினுலே கிளப்பப்பட்ட மோஹ அலைகள் வீசப்பெற்றதும், மனைவி என்ற சுழலுடன் கூடி, மக்கள், உடன்பிறந்தார் என்ற முதலைக் கூட்டங்கள் நிரம்பப் பெற்றதுமான ஸம்ஸாரம் என்ற பெயருள்ளதோர் பெருங்கடலில் மூழ்கிக்கொண்டிருக்கும் என் போன்றவர்களுக்கு, ஏ மூன்று ஸ்தானங்களிலுமிருப்பவனே! வரங்களெல்லாம் தருபவனே! 'உன்னுடைய இரண்டு சரணுரவிந்தங்களிலும் பக்தி' என்கிறதோர் ஓடத்தை உதவியருளவேணும்.

ஸ்ரீ ராகவானந்தருடைய வியாக்கியானத்தில், இங்கே முகுந்தாஷ்டாதஶாக்ஷர மந்த்ரத்திலுள்ள அர்த்தங்கள் குறிப்பிடப்படுகின்றன என்று விவரிக்கப்பட்டிருக்கிறது.

**த்ரிதாமந்** அகார, உகார, மகாரங்களென்று சொல்லப்படுகின்றவையும், விழிப்பு, தூக்கம், காடநித்தரை என்று குறிப்பிடப்பட்டவையுமான மூன்று ஸ்தானங்களை உடையவர் என்பது ஒரு பொருள். பூ: புவ: ஸுவ: என்று உணர்த்தப்படும் மூவுலகங்களையும்

மூன்று வ்யாஹ்ருதிகளையும் இருப்பிடமாய்க் கொண்டவர் என்பது மற்றொரு பொருள்.

பக்திநாவம் ப்ரயச்ச பகவானிடம் நமக்கு ஏற்படும் பிரீதிக்குப் பகவானே காரணமாக நிற்கின்றார் என்பது இங்கே கருத்து. 'யமேவைஷ வ்ருணுதே' இத்யாதி ச்ருதியும் இங்கே நினைக்கத்தக்கது.

**मा द्राक्षं क्षीणपुण्यान् क्षणमपि भवतो भक्तिहीनान् पदाब्जे**
**मा श्रौषं श्राव्यबन्धं तव चरितमपास्यान्यदाख्यानजातम् ।**
**मा स्मार्षं माधव त्वामपि भुवनपते चेतसाऽपह्नुवानान्**
**मा भूवं त्वत्सपर्याव्यतिकररहितो जन्मजन्मान्तरेऽपि ॥ १७ ॥**

17. மா த்ராக்ஷம் க்ஷீணபுண்யாந் க்ஷணமபி
பவதோ பக்திஹீநாந் பதாப்ஜே
மா ச்ரௌஷம் ச்ராவ்யபந்தம்
தவ சரிதமபாஸ்யாந்யதாக்யாநஜாதம்,
மா ஸ்மார்ஷம் மாதவ த்வாமபி
புவநபதே சேதஸா'பஹ்நுவாநாந்
மா பூவம் த்வத்ஸபர்யாவ்யதிகரரஹிதோ
ஜந்ஜமந்மாந்தரே'பி.

உம்முடைய பாதாரவிந்தத்தில் ஒரு நொடியேனும் பக்தி செய்யாத அந்தப்பாவிகளை நான் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன். உம் சரிதைகளைச் சொல்லாமல் வேறு எந்தக் கதைகளையோ பேசும் பிரபந்தம் கேட்பதற்கு இனியதாயிருந்தாலும், நான் அதைக் கேட்கமாட்டேன். ஓ மாதவரே! லோகநாதா! உம்மை உள்ளத்தில் வைத்திருக்காதவர்களை நான் நெஞ்சாலும் நினைக்கமாட்டேன். எப்பிறப்பிலும் உம் பூஜைகளின் கூட்டுறவு இல்லாமல் இருக்கவும் மாட்டேன்.

இக்கவி தாமோ அல்லது இவர் பெயரை அலங்கரிக்கும் வேறொரு பக்தரோ அருளிய பெருமாள் திரு

மொழியில் மூன்றும் திருமொழியில் உள்ள பாசுரங்களை மிகவும் அநுஸரிப்பதாய் இருக்கிறது, இச் சுலோகத்தின் கருத்து. அத்திருமொழியிலுள்ள முதல் பாசுரம்,

"மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும்
இவ்வையந் தன்னொடும் கூடுவதில்லை யான்"

என்று ஆரம்பிக்கிறது.

இக் கவியின் தாத்பர்யம், 'நான் எப்பொழுதும் உம் அடியார்களுடனே கூடி, உம் சரிதங்களைச் சிரவணம் செய்துகொண்டு, உம்மைத் தியானிப்பவரையே என் மனத்தில் இருத்தி, என் வாழ்நாளைக் கழிப்பேன்' என்பது; இங்கே நிஷேதத்தால் விதியின் த்வனி ஏற்படுகிறது கருதத் தக்கது.

'ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்' என்ற சரணாகதியின் இரண்டாவது அங்கம் இங்கே குறிப்பு.

वात्सल्यादभयप्रदानसमयादार्तार्तिनिर्वापणात्
औदार्यादघशोषणादगणितश्रेयःपदप्रापणात् ।
सेव्यः श्रीपतिरेक एव सततं सन्त्यत्र षट् साक्षिणः
प्रह्लादश्च विभीषणश्च करिराट् पाञ्चाल्यहल्या ध्रुवः ॥१८॥

18. வாத்ஸல்யாதபயப்ரதாந ஸமயாத்
ஆர்த்தார்த்தி நிர்வாபணாத்
ஔதார்யாதகசோஷணாதகணித–
ச்ரேய:பதப்ராபணாத்,
ஸேவ்ய: ஶ்ரீபதிரேக ஏவ ஸததம்
ஸந்த்யத்ர ஷட் ஸாக்ஷிண:
ப்ரஹ்லாதச்ச விபீஷணச்ச கரிராட்
பாஞ்சால்யஹல்யா த்ருவ:.

அன்பினாலும், அபயமளிக்கும் கொள்கையினாலும் துன்புறுவோர் துயரத்தை நீக்குவதாலும், தாராளத்தன்

மையினாலும், பாவங்களைப் போக்கடிப்பதாலும், எண்ணுவதற்கரிய சுபஸ்தானத்தை அடைவிப்பதாலும், ச்ரிய:பதி ஒருவரே எக்காலமும் வழிபடத்தக்கவர். இதற்கு ப்ரஹ்லாதன், விபீஷணன், கஜேந்திரன், திரௌபதி, அஹல்யா, துருவன் என்கிற அறுவர் ஸாக்ஷிகளாக இருக்கிறார்கள்.

जिह्वे कीर्तय केशवं मुररिपुं चेतो भज श्रीधरं
पाणिद्वन्द्व समर्चयाच्युतकथाश्श्रोत्रद्वय त्वं शृणु ।
कृष्ण लोकय लोचनद्वय हरेर्गच्छांघ्रियुग्मालयं
जिघ्र घ्राण मुकुन्दपादतुलसीं मूर्धन् नमाधोक्षजम् ॥१९॥

19. ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முராரிபும்
சேதோ பஜ ஸ்ரீதரம்
பாணித்வந்த்வ ஸமர்ச்சயாச்யுதகதா:
ச்ரோத்ரத்வய த்வம் ச்ருணு,
க்ருஷ்ணம் லோகய லோசநத்வய
ஹரேர் கச்சாங்க்ரியுக்மாலயம்
ஜிக்ர க்ராண முகுந்தபாததுலஸீம்
மூர்தந் நமாதோக்ஷஜம்.

ஏ நாவே! நீ கேசவனைப் பாடுவாயாக. ஏ மனமே! நீ முரசத்துருவை ஸ்மரிப்பாயாக. இணைக்கைகளே! லக்ஷ்மீதரனை நீங்கள் அர்ச்சனை செய்யுங்கள். இணைக் காதுகளே! அச்சுதனுடைய கதைகளைச் சிரவணம் செய்யுங்கள். இரண்டு கண்களே! ஸ்ரீகிருஷ்ணனைக் காணுங்கள். இரண்டு கால்களே! நீங்கள் ஹரியின் ஆலயங்களுக்குச் செல்லுங்கள். ஏ மூக்கே! முகுந்தனுடைய பாதத்தில் அர்ச்சிக்கப் பட்ட துளஸியை நீ முகர்வாய். தலையே! அதோக்ஷஜனை நமஸ்கரிப்பாய்.

'விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்' அதாவது 'இவ்வளவு விசித்திரமான சரீர ஸம்பத்தைப்

பகவான் நமக்கு அருளியிருப்பது அதை அவரிடத்திலேயே பயன்படச் செய்வதற்காக' என்றுள்ள சாஸ்த்ரத்தை அநுஸரித்து இச்சுலோகம் பாடப்பட்டிருக்கிறது. 'இப்படி ஒருவன் செய்துகொண்டிருந்தால் மற்றக் காரியங்களை அவன் எவ்வாறு நடத்த இயலும்?' என்பதை எண்ணி, ஸ்ரீகிருஷ்ணன் ஸ்ரீ பகவத்கீதையில் 'தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்' 'நானே நேர் நின்று அவர்களுடைய யோகக்ஷேமத்தை அவர்களுக்காக நடத்துகிறேன்' என்று வாக்களித்திருக்கிறார்; அம்பரீஷ மஹாராஜன் விஷயத்தில் அதை அநுஷ்டித்தும் காட்டியிருக்கிறார். அம்மஹாராஜன் பகவானிடத்தில் இருந்து வந்த பிரகாரம் ஸ்ரீபாகவதத்தில் அடியில் கண்டபடி வருணிக்கப்பட்டிருக்கிறது; [9. 4-18, 19, 20.]

ஸ வை மந: க்ருஷ்ணபதாரவிந்தயோ:
வசாம்ஸி வைகுண்ட குணாநுவர்ணநே,
கரௌ ஹரேர் மந்திரமார்ஜநாதிஷு
ச்ருதிம் சகாராச்யுதஸத்கதோதயே.
முகுந்தலிங்காலய தர்சநே த்ருசௌ
தத்ப்ருத்யகாத்ரஸ்பர்சே'ங்கஸங்கமம்
க்ராணஞ்ச தத்பாதஸரோஜஸௌரபே
ஸ்ரீமத் துளஸ்யா ரஸநாம் ததர்ப்பிதே.
பாதௌ ஹரே: க்ஷேத்ரபதாநுஸர்ப்பணே
சிரோ ஹ்ருஷீகேச பதாபிவந்தநே,
காமஞ்ச தாஸ்யே ந து காமகாம்யயா
யதோத்தமச்லோகஜநாச்ரயா ரதி:.

இதன் ஸங்க்ரஹமேதான் இங்குள்ள ச்லோகமும்.

हे लोकाश्शृणुत प्रसूतिमरणव्याधेश्चिकित्सामिमां
योगज्ञास्समुदाहरन्ति मुनयो यां याज्ञवल्क्यादयः ।

अन्तर्ज्योतिरमेयमेकममृतं कृष्णाख्यमापीयतां
तत्पीतं परमौषधं वितनुते निर्वाणमात्यन्तिकम् ॥ २० ॥

20. ஹே லோகாச்ச்ருணுத ப்ரஸூதி-
மரணவ்யாதேச் சிகித்ஸாமிமாம்
யோகஜ்ஞாஸ்ஸமுதாஹரந்தி முநயோ
யாம் யாஜ்ஞவல்க்யாதய:,
அந்தர்ஜ்யோதி ரமேய மேகமம்ருதம்
க்ருஷ்ணாக்யமாபீயதாம்
தத்பீதம் பரமௌஷதம் விதநுதே
நிர்வாணமாத்யந்திகம்.

ஏ ஜனங்களே! பிறப்பது இறப்பது என்கிற நோய்க்கு வைத்தியம் சொல்லுகிறேன், கேளுங்கள்; இந்த வைத்தியத்தை, யோகமுறையை நன்கறிந்த யாஜ்ஞவல்க்யர் முதலாயினோர் எடுத்துக் கூறியிருக்கின்றார்கள். உட்சோதியாய் விளங்கும் கிருஷ்ணன் என்ற பெயருள்ள ஆராவமுதமான அபார வீர்யமுள்ள இது ஒன்றையே குடியுங்கள். இச்சிறந்த மருந்து, பானஞ் செய்யப்பட்டவுடனேயே, சாச்வதமான ஆரோக்யத்தைப் பரவச் செய்கின்றதாகும்.

நிவ்ருத்ததர்ஷை: உபகீயமாநாத்
பவௌஷதாத் ச்ரோத்ரமநோபிராமாத்,
க உத்தமச்லோககுணாநுவாதாத்
புமாந் விரஜ்யேத விநா பசுக்நாத்.

(ஸ்ரீபாகவதம் 10-1-4)

ஸ்ரீபகவந்நாம ஸங்கீர்த்தனத்திற்கு முக்தன், முமுக்ஷு, ஜீவன் இம்மூவரும் அதிகாரிகள் என்பதும், அவர்கள் ஒவ்வொருவரும் முறையே வேண்டுவதான ஆனந்தம், ஔஷதப்ராப்தி, இந்திரியஸுகம் என்றுள்ள பயன்கள் இங்கே இருக்கின்றன என்றும் ஸ்ரீபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை எண்ணி, முமுக்ஷு ஜீவர்களைப் பார்த்து, அவர்கள்

தீர்க்க ஆசைப்படும் பிறவி நோய்க்கு இங்கே மருந்து சொல்லப்படுகிறது. அம்ருதம் என்கிற பதப்ரயோகத்தால் ஔஷதங்களுக்கு இயல்பு கசப்பாக இருந்தும், இம்மருந்து அவ்வாறில்லாமல் அமிர்தம்போல் இனித்திருக்கும் என்பர். இதற்கு "அநுபானம் முதலியவை ஒன்றும் கிடையா. பத்தியமும் இல்லை" என்பதை ஏக பரம சப்தங்கள் த்வனிப்பிக்கின்றன.

हे मर्त्याः परमं हितं शृणुत वो वक्ष्यामि संक्षेपतः
संसारार्णवमापदूर्मिबहुलं सम्यक्प्रविश्य स्थिताः ।
नानाज्ञानमपास्य चेतसि नमोनारायणायेत्यमुं
मन्त्रं सप्रणवं प्रणामसहितं प्रावर्तयध्वं मुहुः ॥ २१ ॥

21. ஹே மர்த்யா: பரமம் ஹிதம் ச்ருணுத வோ
வக்ஷ்யாமி ஸம்க்ஷேபத:
ஸம்ஸாரார்ணவமாபதூர்மிபஹுளம்
ஸம்யக் ப்ரவிச்ய ஸ்திதா:,
நாநாஜ்ஞாநமபாஸ்ய சேதஸி
நமோ நாராயணாயேத்யமும்
மந்த்ரம் ஸப்ரணவம் ப்ரணாமஸஹிதம்
ப்ராவர்த்தயத்வம் முஹு:.

இறக்கும் இயல்புள்ள மனிதர்களே! நாநாவித அபாய அலைகள் நிரம்பப்பெற்ற ஸம்ஸார ஸாகரத்தில் வெகுதூரம் பிரவேசித்திருக்கும் உங்களுக்கு உத்கிருஷ்டமான மீளும் உபாயம் ஒன்றைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன், கேளுங்கள். உங்கள் மனத்தில் பலவாறுயுள்ள அறிவுகளையோ அறியாமைகளையோ ஒதுக்கி, நமோ நாராயணாய என்ற அந்த மந்திரத்தையே ஓம் என்பதுடன் சேர்த்து வணக்கத்துடன் அடிக்கடி ஆவர்த்தனம் செய்யுங்கள்.

மந்த்ர உபதேசத்திற்கு உரிய அதிகாரிகள் முதலிய நியமங்கள் வேண்டப்படுகின்றன. 'அஷ்டாக்ஷர மந்த்ரோபதேசத்திற்கு ஸம்ஸாரத்தில் உழலும் தன்மை ஒருவனுக்கு எவ்வளவுக் கெவ்வளவு இருக்கிறதோ, அவனே உத்தமாதிகாரி' என்று ஸ்ரீ குலசேகரர் எண்ணி, அவ்வித அதிகாரிகளே உலகெங்கும் கணக்கற்றிருப்பதையும் நினைத்து, அவர்களுக்கு அம் மந்த்ரத்தை யாதொரு நியமமும் விதியாமல் உபதேசிக்கிருர். இது இவருடைய ஔதார்யாதிசயத்தையும் மந்த்ரத்தின் ப்ரபாவாதிசயத்தையும் உணர்த்துவதாகும்.

ப்ரணமஸஹிதம் என்ற நியமம் ஒன்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. மந்த்ரத்திலும் அதற்குத் தேவையான ஸ்ரீமந்நாராயணனிடத்திலும் (இக்கவியைப்போல) மந்த்ரத்தை உபதேசிக்கும் ஆசார்யனிடத்திலும் அளவற்ற ப்ரீதி விச்வாஸமே ப்ரணமசப்தத்தால் அறிவிக்கப்படுவதாகும். இந்த ப்ரணமம் இல்லாதபோது ப்ரணவாக்ஷரம் இல்லா விடடால், எப்படி அஷ்டாக்ஷரம் என்ற பெயரே மந்த்ரத்திற்கு ஸித்தியாதோ, அவ்விதம் மந்த்ர ஜபத்திற்குரிய பலன் ஒன்றும் கைகூடாது. இதை நினைத்தே ஸப்ரணவம் ப்ரணமஸஹிதம் என்று இங்கே சொல்லியிருப்பது.

पृथ्वी रेणुरणुः पयांसि कणिका फल्गुस्स्फुलिङ्गो लघुः
तेजो निश्वसनं मरुत्तनुतरं रन्ध्रं सुसूक्ष्मं नभः ।
क्षुद्रा रुद्रपितामहप्रभृतयः कीटास्समस्तास्सुराः
दृष्टे यत्र स तारको विजयते भूमाऽवधूतावधिः ॥२२॥

22. ப்ருத்வீ ரேணுரணு: பயாம்ஸி கணிகா
பல்குஸ்ஸ்புலிங்கோ ல்கு:
தேஜோ நிச்வஸநம் மருத்தநுதரம்
ரந்த்ரம் ஸுஸூக்ஷ்மம் நப:,

க்ஷுத்ரா ருத்ரபிதாமஹப்ரப்ருதய:
கீடாஸ்ஸமஸ்தாஸ்ஸுரா:
த்ருஷ்டே யத்ர ஸ தாவகோ விஜயதே
பூமா'வதூதாவதி:.

எதைக் கண்ணுற்றபோது(பஞ்சமஹாபூதங்களில்) பூமி நுண்ணியதோர் துகள்போலவும், ஜலம் சிறு திவலையே போலவும், நெருப்பு ஓர் பொறி எனவும், வாயு அல்ப மூச்சுக் காற்றுப் போலவும், ஆகாசம் மிகச் சிறிய துவாரம் போலவும், ருத்ரசதுர்முகாதி தேவர்கள் எல்லோரும் சிறிய புழுக்கள் போலவும் தோன்றுவரோ அந்த எல்லை கடந்து நிற்கும் உம்முடைய மகிமை ஒன்றே சிறந்து விளங்குகின்றது.

க்ஷுத்ரா ருத்ரபிதாமஹப்ரப்ருதய: என்று சொல்லியிருப்பதற்கு, அந்தத் தேவர்கள் தாழ்ந்தவர்கள் என்பதில் சிறிதேனும் தாத்பர்யம் கிடையாது. ஸ்ரீமந் நாராயணனிடத்தில் உள்ள பக்தியின் அளவிடமுடியாத ஆதிக்யமும் அனன்யத்வமுமே இங்கே குறிப்பு.

இதில் அநுஸரிக்கப்பட்டிருக்கும் ப்ரகாரம்,

மம து யதியம் யாதா லோகே விலோசநசந்த்ரிகா
நயநவிஷயம் ஜந்மந்யேக: ஸ ஏவ மஹோத்ஸவ:.

'என் கண்களுக்குச் சந்திரிகைபோல் விளங்கும் இவளை நான் ஒருகால் கண்டால் அதுவே எனக்கு ஜன்ம ஸாபல்யம்; மற்ற எதையும் மிகத் துச்சமாக நினைக்கிறேன்' என்று ஒரு காமுகன் சொல்லும் துறையைத் தழுவியதாகும்.

बद्धेनाञ्जलिना नतेन शिरसा गात्रैस्सरोमोद्गमैः
कण्ठेन स्वरगद्गदेन नयनेनोद्गीर्णबाष्पाम्बुना ।
नित्यं त्वच्चरणारविन्दयुगलध्यानामृतास्वादिनाम्
अस्माकं सरसीरुहाक्ष ! सततं संपद्यतां जीवितम् ॥२३॥

23. பத்தேநாஞ்ஜலிநா நதேந சிரஸா
காத்ரைஸ்ஸரோமோத்கமை:
கண்டேந ஸ்வரகத்கதேந நயநேநோத்கீர்ண-
பாஷ்பாம்புநா,
நித்யம் த்வச்சரணாரவிந்தயுகல-
த்யாநாம்ருதாஸ்வாதிநாம்
அஸ்மாகம் ஸரஸீருஹாக்ஷ! ஸததம்
ஸம்பத்யதாம் ஜீவிதம்.

தாமரைக்கண்ணா! கூப்பிய கைகளுடன் வணங்கிய தலையுடன், சிலிர்த்த மயிர்க்கால்களையுடைய தேகத்துடன், தழுதழுத்த குரலுள்ள கண்டத்துடன், கண்ணீர் பெருகுகின்ற கண்களுடன், எந்நாளும் உன்றன் இரண்டு சரண கமலங்களைத் தியானிப்பது என்கிற அமிருதரஸத்தைப் பருகிக் கொண்டிருப்பவர்களாய் நாங்களேயாகி எங்களுடைய வாழ்நாட்கள் கடைத்தேறட்டும்.

அஸ்மாகம் என்று பன்மையாகக் கூறப்பட்டிருப்பது 'ஏக: ஸ்வாது ந புஞ்ஜீத' 'இனிய பதார்த்தம் எதையும் ஒருவன் தனித்துப் புசிக்கலாகாது' என்கிற நியாயத்தை அநுசரிப்பதாகும்.

ஸரஸீருஹாக்ஷ என்பது, அப்படி நாங்கள் பெறுமாறு எங்களை நீ குளிரக் கடாக்ஷிக்க வேண்டும் என்னும் பொருளை அடக்கிக்கொண்டிருக்கிறது.

हे गोपालक! हे कृपाजलनिधे! हे सिन्धुकन्यापते!
हे कंसान्तक! हे गजेन्द्रकरुणापारीण! हे माधव।
हे रामानुज! हे जगत्त्रयगुरो! हे पुण्डरीकाक्ष! मां
हे गोपीजननाथ! पालय परं जानामि न त्वां विना॥२४॥

24. ஹே கோபாலக! ஹே க்ருபாஜலநிதே!
ஹே ஸிந்துகந்யாபதே!
ஹே கம்ஸாந்தக! ஹே கஜேந்த்ரகருணாபாரீண!
ஹே மாதவ!
ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரயகுரோ!
ஹே புண்டரீகாக்ஷ! மாம்
ஹே கோபீஜநநாத! பாலய பரம் ஜாநாமி ந
த்வாம் விநா

ஏ பசுக்களைக் காப்பவனே! ஏ கருணைக்கடலே! ஏ கடல்மகள் நாயகா! ஏ கம்ஸனைக்கொன்றவனே! ஏ கஜேந்திரனுக்கு அருள் புரிந்தவனே! ஏ மாதவா! ஏ ராமாநுஜா! ஏ மூவுலகும் காக்கும் குருவே! ஏ தாமரைக் கண்ணுடையாய்! ஏ கோபிகா ஜனங்களுக்கு ஆதரவு அளிப்பவனே! என்னைக் காப்பாற்ற வேண்டும். உன்னை ஒழிய வேறு (சரணம் அளிக்கும்) எவரையும் நான் அறியேன்.

இந்த ச்லோகம் 'கோப்த்ருத்வ வரணம்' என்கிற சரணாகதியின் நான்காவது அங்கத்தை விஷயீகரிப்பதாகும். 'கோப்த்ருத்வ வரணம்' என்றால் ஈச்வரனுடைய ரக்ஷையைப் பிரார்த்திப்பதாகும். 'ரக்ஷாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே' என்பது சாஸ்திரம். இதில் உள்ள ஸம்போதனங்கள் பகவானுடைய ரக்ஷண சீலத்தையும், அதற்குரிய சாமர்த்திய விசேஷத்தையும் அறிவிப்பனவாகும்.

भक्तापायभुजङ्गगारुडमणिस्त्रैलोक्यरक्षामणिः
गोपीलोचनचातकाम्बुदमणिस्सौन्दर्यमुद्रामणिः ।
यः कान्तामणिरुक्मिणीघनकुचद्वन्द्वैकभूषामणिः
श्रेयो देवशिखामणिर्दिशतु नो गोपालचूडामणिः ॥२५॥

25. பக்தாபாயபுஜங்க காருடமணிஸ்
த்ரைலோக்யாரக்ஷாமணி:
கோபீலோசநசாதகாம்புதமணிஸ்
ஸௌந்தர்ய முத்ராமணி:,
ய: காந்தாமணிருக்மிணீகநகுச—
த்வந்த்வைக பூஷாமணி:
ச்ரேயோ தேவசிகாமணிர்
திசது நோ கோபாலசூடாமணி:.

பக்தர்களின் துர்க்கதியாகிற ஸர்ப்பங்களுக்குக் கருட மணியாய், மூவுலகுக்குமோர் காப்பு மணியாய், கோபிகைகளின் கண்களாகிற சாதகங்களுக்கு மேக மணியாய், அழகு என்பதற்கோர் அடையாளமணியாய், மாதர்மணியாகிய ருக்மிணீ தேவியின் பருத்த ஸ்தனங்களுக்கு இன்றியமையாத அலங்காரமணியாய் விளங்கும் இந்தப் பசுபாலசிரோமணியான தேவசிகாமணி நமக்குரிய நற்பயனைத் தந்தருளட்டும்.

இந்த ச்லோகத்தாலும், இதற்குப் பின்னுள்ள இரண்டு ச்லோகங்களாலும், மனிதர்கள் தங்கள் கஷ்டங்களைத் தீர்த்துச் சுகம் அடையும்பொருட்டு வெகு பிரயாஸப்பட்டுத் தேடும் மணி, மந்த்ரம், ஔஷதம் என்பவை ஸாக்ஷாத் கண்ணனைத் தவிர வேறில்லை என்கிற ஸித்தாந்தம் பிரேரேபிக்கப்படுகிறது.

शत्रुच्छेदैकमन्त्रं सकलमुपनिषद्वाक्यसम्पूज्यमन्त्रं
संसारोच्चारमन्त्रं समुपचिततमस्सङ्घनिर्याणमन्त्रम् ।
सर्वैश्वर्यैकमन्त्रं व्यसनभुजगसंदष्टसन्त्राणमन्त्रं
जिह्वे ! श्रीकृष्णमन्त्रं जप जप सततं जन्मसाफल्यमन्त्रम् ॥ २६ ॥

26. சத்ருச்சேதைக மந்த்ரம் ஸகலமுபநிஷத்
வாக்யஸம்பூஜ்ய மந்த்ரம்
ஸம்ஸாரோத்தார மந்த்ரம் ஸமுபசிததமஸ்
ஸங்கநிர்யாண மந்த்ரம்,

ஸர்வைச்வர்யைக மந்த்ரம் வ்யஸநபுஜக-
ஸந்தஷ்ட ஸந்த்ராண மந்த்ரம்
ஜிஹ்வே! ஸ்ரீக்ருஷ்ண மந்த்ரம் ஜப ஜப
ஸததம் ஜந்மஸாபல்ய மந்த்ரம்.

ஏ நாவே! ஸ்ரீகிருஷ்ண மந்த்ரத்தையே இடைவிடாது திரும்பத் திரும்ப ஜபம் செய்துகொண்டிரு. சத்துருக்கள் பட்டுப்போவற்குத் தக்க மந்த்ரம் இது; பரிபூர்ணமானதும் உபநிடதச் சொற்களால் கொண்டாடப்பட்டதுமான மந்த்ரம்; ஸம்ஸாரத்தினின்று கரையேற்றும் மந்த்ரம்; குவிந்து கிடக்கும் அஜ்ஞானமாகிய கன இருளைப் போக்கடிக்கும் மந்த்ரம்; ஸர்வவித ஸம்பத்துக்களுக்கும் மூலமந்த்ரம்; துயர் என்னும் அரவால் தீண்டப்பட்டவர்களின் உயிரைக் காக்கும் மந்த்ரம்; ஜன்மமெடுத்தற்குப் பயனும் இம் மந்த்ரமே.

व्यामोहप्रशमौषधं मुनिमनोवृत्तिप्रवृत्त्यौषधं
दैत्येन्द्रार्तिकरौषधं त्रिभुवनीसञ्जीवनैकौषधम् ।
भक्तात्यन्तहितौषधं भवभयप्रध्वंसनैकौषधं
श्रेयःप्राप्तिकरौषधं पिब मनः श्रीकृष्णदिव्यौषधम् ॥ २७ ॥

27. வ்யாமோஹப்ரசமௌஷதம்
முநிமநோவ்ருத்திப்ரவ்ருத்யௌஷதம்
தைத்யேந்த்ரார்த்திகரௌஷதம்
த்ரிபுவநீஸஞ்ஜீவநைகௌஷதம்,
பக்தாத்யந்தஹிதௌஷதம் பவபய-
ப்ரத்வம்ஸநைகௌஷதம்
ச்ரேய:ப்ராப்திகரௌஷதம் பிப மந:
ஸ்ரீக்ருஷ்ண திவ்யௌஷதம்.

வாராய், மனமே! ஸ்ரீகிருஷ்ணனென்கிற சிறந்த ஔஷதத்தைக் குடி. அது மயக்கங்களைத் தெளிவிக்கும் ஔஷதம்; முனிவர்களுடைய மானஸிக வியாபாரங்களைத் தன்னிடமே செல்லச் செய்யும் ஔஷதம்; அசுர அரசர்கள் அனைவரையும் நோவுபடச் செய்யும் ஔஷதம்; மூவுலகங்களும் புத்துயிர் பெறுவதற்கேற்றதோர் ஔஷதம்; பக்தர்களுக்கு மிகவும் ஹிதமான ஔஷதம்; பிறவிப்பயத்தை நாசம் செய்வதற்கு இன்றியமையாத ஔஷதம்; ஸர்வவித மங்களங்களையும் அடைவிக்கும் ஔஷதமும் இதுவே.

आम्नायाभ्यसनान्यरण्यरुदितं वेदव्रतान्यन्वहं
मेदश्छेदफलानि पूर्तविधयस्सर्वे हुतं भस्मनि ।
तीर्थानामवगाहनानि च गजस्नानं विना यत्पद-
द्वन्द्वाम्भोरुहसंस्मृतीर्विजयते देवस्स नारायणः ॥२८॥

28. ஆம்நாயாப்யஸநாந்யரண்யருதிதம்
வேதவ்ரதாந்யந்வஹம்
மேதச்சேதபலாநி பூர்த்த-
விதயஸ்ஸர்வே ஹுதம் பஸ்மநி,
தீர்த்தாநாமவகாஹநாநி ச
கஜஸ்நாநம் விநா யத்பத-
த்வந்த்வாம்போருஹஸம்ஸ்ம்ருதீர் விஜயதே
தேவஸ்ஸ நாராயண:.

எவருடைய இரண்டு சரணகமலங்களின் நினைவு இல்லாதபோது, வேதங்களை ஓதுவதெல்லாம் காட்டுப் புலம்பலெனப் போய்விடுமோ, அவ்வேதங்களிலே சொன்ன விரதங்களைத்தான் தவறாமல் அநுஷ்டிப்பதும் (சரீரத்தில்) கொழுப்பு நீர் குறைவதற்கு மாத்திரமே ஹேதுவாகுமோ, தடாகங்களை அமைப்பது முதலிய நற்செய்கைகளும் சாம்பலில்பண்ணிய ஆகுதியென

ஆகிவிடுமோ, புண்ணிய தீர்த்தங்களில் ஆடுவதும் யானை குளித்ததாக முடியுமோ, அந்தத் தேவன் ஸாக்ஷாத் நாராயணன் ஒருவனே மேன்மைபெற்று விளங்குகிறான்.

சதுர்வேததரோ விப்ரோ
வாஸுதேவம் ந விந்ததி,
வேதபாரபராக்ராந்த:
ஸ வை ப்ராஹ்மணகர்தப:.
ப்ராயச்சித்தாநி ஜீர்ணாநி
நாராயணபராங்முகை:,
ந நிஷ்புநந்தி ராஜேந்த்ர!
ஸுராபாண்டமிவாபகா:.
தர்ம: ஸ்வநுஷ்டித: பும்ஸாம்
விஷ்வக்ஸேநகதாஸு ய:,
நோத்பாதயேத் யதி ரதிம்
ச்ரம ஏவ ஹி கேவலம்.

என்றுள்ள ஸ்ம்ருதி வசனங்கள், நாராயண ஸ்ம்ருதி ஒன்றே ஸமஸ்த ஸத்கார்யங்களுக்கும், ப்ராயச்சித்தங்களுக்கும், உடல்களுக்கு உயிர்போல் இருப்பதாகையால், அந்த ஸ்ம்ருதி இல்லாதபோது அவை எல்லாம் பயனற்று அத்யந்தம் ஸத்தையற்றவைகளாய்விடுவன என்பதை நிரூபிக்கின்றன. அவற்றை ஒட்டியே இந்த ச்லோகமும் பாடப்பட்டிருக்கிறது.

श्रीमन्नाम प्रोच्य नारायणाख्यं के न प्रापुर्वाञ्छितं पापिनोऽपि।
हा नः पूर्वं वाक्प्रवृत्ता न तस्मिन् तेन प्राप्तं गर्भवासादिदुःखम्॥

29\. ஸ்ரீமந் நாம ப்ரோச்ய நாராயணாக்யம்
கே ந ப்ராபுர் வாஞ்சிதம் பாபிநோ'பி,
ஹா ந: பூர்வம் வாக் ப்ரவ்ருத்தா ந தஸ்மிந்
தேந ப்ராப்தம் கர்பவாஸாதிது:கம்.

பாவிகளாக இருந்தாலும் நாராயணு என்ற ஸௌமங்களமான திருநாமத்தை நன்ருகக் கீர்த்தனம் செய்தவர்கள் எவர்கள்தாம் தங்கள் அபீஷ்டங்களைப் பெறவில்லை? என்ன கஷ்டம்! முன்னமேயே அவனிடத்தில் நம்முடைய வாக்குச் செல்லாமற் போயிற்றே! ஆகையால் அல்லவோ தாய்வயிற்றில் வசித்தல் முதலிய துயரங்கள் நம்மால் அடையப்பட்டன.

இந்த ச்லோகம் கார்ப்பண்யம் (தைந்யம்) என்னும் சரணுகதியின் கடைசி அங்கத்தைத் தெரிவிக்கின்றது.

ஸ்ரீமந்நாம என்பதை ஒரு ஸமாஸ பதமாகக் கொண்டு திருமாலின் திருநாமம் என்று பொருள் கூறுவர். ஸ்ரீ உ. வெ. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி. ஆனுல் ஸ்ரீராகவானந்த வ்யாக்யானத்தில் 'நாம' என்பதற்கு ஸ்ரீமத் என்பதை விசேஷணமாக வைத்து 'ஸௌமங்களம் நாம' என்று அர்த்தம் சொல்லியிருப்பதால், அந்தப்படிக்கே இங்கே அது மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

मज्जन्मनः फलमिदं मधुकैटभारे! मत्प्रार्थनीयमदनुग्रह एष एव।
त्वद्भृत्यभृत्यपरिचारकभृत्यभृत्यभृत्यस्य भृत्य इति मां स्मर
लोकनाथ! ॥ ३० ॥

30. மஜ்ஜந்மந: பலமிதம் மதுகைடபாரே!
மத்ப்ரார்த்தநீய மதநுக்ரஹ ஏஷ ஏவ,
த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரகப்ருத்ய ப்ருத்ய
ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத!

மதுகைடபர்கள் என்கிற அசுரர்களைக் கொன்றவனே! ஹே ஜகந்நாத! நான் ஜன்மமெடுத்ததற்கு இதுவே பயன். எனக்கு நீ செய்யவேண்டியதாய்

என்றால் வேண்டப்படும் அநுக்ரஹமும் இதுவே. உம்முடைய அடிமைக்கு அடிமையாய் இருப்பவருடைய பரிசாரகருடைய அடிமைக்கு அடிமை எவரோ, அவரடிமையின் அடிமையாக இருப்பவன் என்று நீ என்னைக் கருத்திற் கொள்ளல் வேண்டும்.

இந்த ச்லோகத்திற்கு ஸ்ரீ உ. வே அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் நிர்வாஹம் மிக அழகியதாய் இருப்பதால், அதுவே இங்கெடுத்து எழுதப்படுகிறது:

யஸ்ஸப்தபர்வவ்யவதாநதுங்காம்
சேஷத்வகாஷ்டாமபஜந்முராரே:

என்று பாதுகாஸஹஸ்ரத்தில் ஸ்ரீ தேசிகன் புகழும்படி 'அடியாரடியார் தம்மடியா ரடியார் தமக்கு அடியாரடியார் தம் அடியா ரடியோங்களே' என்று திருவாய்மொழி (2972) யில் சரமாவதி தாஸ்யத்தை அருளிச் செய்த நம்மாழ்வாரை அடியொற்றி இவரும் அப்படிப் பட்ட தாஸ்யத்தை விரும்புகின்றார்.

எவ்விதச் செல்வத்திற்கும், பரம்பரா ப்ராப்தியையொட்டி ஒரு கௌரவம் உண்டாவதைப் பார்க்கிறோம். இதற்கு எதிர்த்தட்டாகப் புதுப்பணம் படைத்தவன் என்று குறைத்தும் சொல்லுகிறோம். செல்வத்துக்கெல்லாம் செல்வமான அடிமைச் செல்வத்திற்கும் இதே நியாயந்தான் என்பதை இச்சுலோகம் உதாஹரிக்கின்றது.

नाथे नः पुरुषोत्तमे त्रिजगतामेकाधिपे चेतसा
सेव्ये स्वस्य पदस्य दातरि सुरे नारायणे तिष्ठति ।
यं कञ्चित्पुरुषाधमं कतिपयग्रामेशमल्पार्थदं
सेवायै मृगयामहे नरमहो! मूढा वराका वयम् ॥ ३१ ॥

31. நாதே ந: புருஷோத்தமே
த்ரிஜகதாமேகாதிபே சேதஸா
ஸேவ்யே ஸ்வஸ்ய பதஸ்ய தாதரி ஸுரே
நாராயணே திஷ்டதி,
யம் கஞ்சித் புருஷாதமம்
கதிபய க்ராமேசமல்பார்த்ததம்
ஸேவாயை ம்ருகயாமஹே
நரமஹோ மூடா வராகா வயம்.

(லோகமும் வேதமும் ஏகோபித்து) புருஷோத்தமன் என்று சொல்லிக் கொண்டாடப்பெற்றவனும், மூவுலகையும் ஓர் குடைக்கீழ் வைத்து ஆளுபவனும், மனத்தாலேயே வழிபடக் கூடியவனும், (அப்படி வழிபடுவோர்க்கு) தன் ஸ்தானத்தையே தந்தருளுபவனுமான தேவன் ஸ்ரீமந் நாராயணன் நம் ஸ்வாமியாய் விளங்கும்போது, (அவனை அணுகாமல்) ஒரு சில கிராமங்களையுடையவனும், அற்பக் கொடையாளியும், புல்லிய புருஷனுமான ஓர் அநாமதேயனை நரமனிதனை ஆச்ரயிப்பதற்குத் தேடுகின்றோமே, என்ன அறிவிலாப் பிராணிகள் நாம்!

'அந்தவத்து பலம் தேஷாம் தத் பவத்யல்பமேதஸாம்' என்று ஸர்வேச்வரனை தன்னை விட்டு இதர தேவதைகளை ஆச்ரயிப்பவர்களைப் புத்திஹீனர்களென்று கீதையில் ஸ்ரீ கண்ணன் சொல்லியிருக்கிறார். இது, மூடா: என்கிற பாடந்தான் ஸமீசீனம் என்பதை உணர்த்துவதாகும்.

मदन! परिहर स्थितिं मदीये मनसि मुकुन्दपदारविन्दधाम्नि।
हरनयनकृशानुना कृशोऽसि स्मरसि न चक्रपराक्रमं मुरारेः॥

32. மதந பரிஹர ஸ்திதிம் மதீயே
மநஸி முகுந்த பதாரவிந்ததாம்நி,

ஊரநயந க்ருசாநுநா க்ருசோ'ஸி
ஸ்மரஸி ந சக்ரபராக்ரமம் முராரே:.

கேளாய், காமனே! ஸ்ரீ முகுந்தனுடைய திருவடித் தாமரைகள் தங்குமிடமான என்றன் ஹ்ருதயத்தில் இருப்பதை விட்டு நீ விலகிப் போய்விடு. ருத்ரருடைய கண் நெருப்பால் நீறுபட்ட நீ, முரனைக் கொன்றவனுடைய சக்கரத்தின் வல்லமையைக் கருதாதிருப்பாயா என்ன?

'இந்த்ரியார்த்தபரா யூயம் நாராயணபரா வயம்' என்பது போல ஸ்ரீமந் நாராயணனிடத்தில் பக்தி செய்யும் ருசியறிந்தவர்கள் காமஸுகத்தை மனத்தாலும் நினைக்கமாட்டார்கள் என்பது இங்கே தாத்பர்யம். பக்தி ஸ்பர்சம் உண்டானபோது, விஷயஸுகம் தானாகவே விலகிவிடும் என்னும் உண்மையும் இங்கே த்வனிதமாகும்.

தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே
நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி,
ஸ்திதே'ரவிந்தே மகரந்தநிர்பரே
மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே,

"தேன் பெருகும் பெருமை பெற்ற தாமரைப் பூவை விட்டு, முள்ளிலவம் பூவை வண்டு ஒருபோதும் இச்சியாது போல, அமிர்தப் பெருக்கையுடைய உன் திருவடித் தாமரையில் வைக்கப் பெற்ற மனம் வேறொன்றை எவ்வாறு நாடும்?" என்றுள்ள ஸ்ரீ யாமுனாசார்யருடைய ஸூக்தி (ச்லோ–27) இங்கே நினைக்கத்தக்கது.

तत्त्वं ब्रुवाणानि परं परस्मात् मधु क्षरन्तीव सतां फलानि ।
प्रावर्तय प्राञ्जलिरस्मि जिह्वे नामानि! नारायणगोचराणि ॥३३॥

33. தத்த்வம் ப்ருவாணானி பரம் பரஸ்மாத்
மது க்ஷரந்தீவ ஸதாம் பலானி,
ப்ராவர்த்தய ப்ராஞ்ஜலிரஸ்மி ஜிஹ்வே!
நாமானி நாராயண கோசராணி.

வாராய் நாக்கே! உன்னைக் கும்பிடுகிறேன். ஸ்ரீமந் நாராயணனை விஷயீகரிக்கும் நாமங்களையே நீ பெருகச் செய். அவை உயர்விற்கும் உயர்வான தத்துவத்தைச் சொல்லுகின்றன. தேன் பெருகப்பெற்றனபோல இருக்கின்றன. ஸாதுக்கள் (விரும்பும்) கனிகள் அவையே.

இங்கு ஜிஹ்வே என்று ஸம்போதனம் செய்திருப்பதன் ஸ்வாரஸ்யம், அர்த்தம் அறியாமல் கேவலம் நாவினால் சொன்னாலும் பகவந்நாமங்கள் அளவற்ற நற்பயனைத் தந்து, கேட்பவர் மனத்தையும் கவரக்கூடியவை என்பதைக் காட்டுகிறது.

इदं शरीरं परिणामपेशलं पतत्यवश्यं श्लथसन्धि जर्जरम् ।
किमौषधैः क्लिश्यसि मूढ दुर्मते निरामयं कृष्णरसायनं पिब ॥

34. இதம் சரீரம் பரிணாமபேசலம்
பதத்யவச்யம் ச்லதஸந்திஜர்ஜரம்,
கிமௌஷதை: க்லிச்யஸி மூட துர்மதே
நிராமயம் க்ருஷ்ணரஸாயநம் பிப.

இச்சரீரம், நாளடைவில் முதிர்ச்சியடைந்து பலமற்றதாய், கட்டுகள் தளர்ந்து விழப்போவது நிச்சயம். மயக்கமுற்று மதிகெட்ட மனிதா! எதற்காக மருந்துகளைத் தேடிக்கொண்டு வீணாகச் சிரமப்படுகிறாய்! தீங்கொன்றுமில்லாத ஸ்ரீகிருஷ்ணன் என்கிற ரஸாயனத்தைப் பானம் பண்ணு, போதும்.

மூடதுர்மதே என்பது தேகத்தையே ஆத்மாவென்று ப்ரமிக்கும் மதியீனத்தைக் காட்டுகிறது.

"ஆத்மாநமேவாத்மதயா விஜாநதாம்,
தேநைவ ஜாதம் நிகிலம் ப்ரபஞ்சிதம்"
தேகத்தை ஆத்மாவென்று ப்ரமிக்கின்றவர்களே இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஸகலவித அநர்த்தங்களுக்கும் மூலபூதர்கள் என்பது ஸ்ரீ சுகருடைய ஸித்தாந்தம்.

दारा वाराकरवरसुता ते तनूजो विरिञ्चिः
स्तोता वेदस्तव सुरगणो भृत्यवर्गः प्रसादः ।
मुक्तिर्माया जगदविकलं तावकी देवकी ते
माता मित्रं वलरिपुसुतस्त्वय्यतोऽन्यन्न जाने ॥ ३५ ॥

35. தாரா வாராகரவரஸுதா
தே தநூஜோ விரிஞ்சி:
ஸ்தோதா வேதஸ்தவ ஸுரகணோ
ப்ருத்யவர்க: ப்ரஸாத:,
முக்திர் மாயா ஜகதவிகலம்
தாவகீ தேவகீ தே மாதா
மித்ரம் பலரிபுஸுதஸ்த்வய்யதோ'
ந்யந் ந ஜாநே.

பாற்கடலின் புதல்வி உன் தேவி. சதுர்முகன் உன் புதல்வன். உன்னைத் துதிப்பது வேதம். தேவர் குழாங்கள் உன்னுடைய வேலைக்காரர்கள். உன்றன் அநுக்ரஹமே மோக்ஷமெனப்படும். உலகெல்லாம் உன்றன் மாயையின் விலாஸம். உன்னுடைய அன்னை தேவகி. மகேந்திரனுடைய புதல்வனான அர்ஜுனன் உனக்குத் தோழன். உன் விஷயத்தில் இவற்றைத் தவிர வேறொன்றையும் அறிந்திலேன் நான்.

பகவத் ஸம்பந்தமாயுள்ள நிர்விசேஷ ஜ்ஞானத்தைக் காட்டிலும், ஸவிசேஷ ஜ்ஞானமே உபாதேயம் என்பது இச் சுலோகத்திலுள்ள விஷயம். பரிமித

புத்திகளாய் இருக்கும் நமக்கு, ஸவிசேஷ ஜ்ஞானம் எளிதில் பகவதநுபவத்தைத் தந்து நம்மைக் கடைத் தேற்றக் கூடுமே தவிர, நிர்விசேஷ ஜ்ஞானத்தை அடைவதற்குச் செய்யும் பிரயாஸம் ஸபலமாகாது. அதை எண்ணியே ஸ்ரீசுகரும், 'ஜ்ஞாநே ப்ரயாஸம் உதபாஸ்ய' என்று உபதேசிப்பர். "அவ்யக்தா ஹி கதிர்து:கம் தேஹவத்பிரவாப்யதே" என்று இந்த நிர்விசேஷ ஜ்ஞானத்தை அடைவது சரீரம் படைத்தவர்கள் அனைவருக்கும் அரிது என்பதை ஸ்ரீகிருஷ்ண பகவானே சொல்லுகிறார்.

कृष्णो रक्षतु नो जगत्त्रयगुरुः कृष्णं नमस्याम्यहं
कृष्णेनामरशत्रवो विनिहताः कृष्णाय तस्मै नमः ।
कृष्णादेव समुत्थितं जगदिदं कृष्णस्य दासोऽस्म्यहं
कृष्णे तिष्ठति सर्वमेतदखिलं हे कृष्ण ! रक्षस्व माम् ॥ ३६ ॥

36. க்ருஷ்ணோ ரக்ஷது நோ ஜகத்த்ரயகுரு:
க்ருஷ்ணம் நமஸ்யாம்யஹம்
க்ருஷ்ணேநாமரசத்ரவோ விநிஹதா:
க்ருஷ்ணாய தஸ்மை நம:,
க்ருஷ்ணாதேவ ஸமுத்திதம் ஜகதிதம்
கிருஷ்ணஸ்ய தாஸோ'ஸ்ம்யஹம்
க்ருஷ்ணே திஷ்டதி ஸர்வமேததகிலம்
ஹே க்ருஷ்ண! ரக்ஷஸ்வ மாம்.

மூவுலகுக்கும் (அஜ்ஞான இருளைப் போக்கி ஞான ஒளியைத் தரும்) குருவான ஸ்ரீகிருஷ்ணன் நம்மைக் காப்பாற்றுவானாக. ஸ்ரீகிருஷ்ணனையே நான் நன்கு நமஸ்கரிக்கின்றேன். ஸ்ரீகிருஷ்ணனால் அல்லவா தேவர்களைப் பகைத்தவர்கள் பட்டார்கள்? ஸ்ரீகிருஷ்ணனின் பொருட்டு நான் ஆத்ம ஸமர்ப்பணம் பண்

ணுகின்றேன். இவ்வுலகெல்லாம் ஸ்ரீகிருஷ்ணனிட மிருந்தே உண்டாயிற்று. ஸ்ரீகிருஷ்ணனுடைய தாஸன் நான். இங்கே தென்படுவதெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனி டத்திலேயே நிலைபெற்று நிற்கின்றது. ஸ்ரீகிருஷ்ணா! (மறுமுறையும் சொன்னேன்) அடியேனை நீ நன்கு காப்பாயாக.

இச் சுலோகத்தின் அமைப்பை உற்று நோக்கி னுமானால் இக்கவிக்குக் கிருஷ்ண பைத்தியம் பிடித்து இவ்வாறு ஸர்வ விபக்திகளிலும் அவரையே வைத்து முன்பின் ஸம்பந்தக் குறைவு, புனருக்தி முதலியவற் றைக் கவனியாமல் சொல்லுகின்றார் என்பது புலப்ப டும். பக்தர்கள் விஷயத்தில், இது குணமே தவிர, தோஷமாகாது.

तत्त्वं प्रसीद भगवन्! कुरु मय्यनाथे
विष्णो! कृपां परमकारुणिकः किल त्वम्।
संसारसागरनिमग्नमनन्त! दीन-
मुद्धर्तुमर्हसि हरे! पुरुषोत्तमोऽसि ॥ ३७ ॥

37. தத்த்வம் ப்ரஸீத பகவந்! குரு மய்யநாதே
விஷ்ணோ! க்ருபாம் பரமகாருணிக: கில த்வம்,
ஸம்ஸார ஸாகர நிமக்ந மநந்த ! தீநம்
உத்தர்த்துமர்ஹஸி ஹரே ! புருஷோத்தமோ'ஸி.

ஷட்குண பரிபூர்ணா! எங்கும் பரந்திருப்பவனே! முடிவில்லாப் பொருளே! மிகுந்த இரக்கமுடைய வனல்லையோ நீ? அந்த நீ கதியற்றிருக்கும் என்னி டம் மனமுவந்து கருணைபுரிவாயாக. பிறவிக்கடலில் மூழ்கியிருக்கும் இவ்வற்பனைக் கரையேற்றக் கடவாய். அடியார் படுந்துயராயின வெல்லாம் அகற்றும் ஹரி யல்லவா நீ? புருஷோத்தமன் என்பானும் நீதானே ஆகின்றாய்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.
அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

என்றிருக்கும் அபியுக்த சிரோமணிகளின் வசனங்களுக்கிணங்க ஸம்ஸாரத்தைக் கடப்பதற்கு, பகவத்கிருபையேயன்றி வேறோர் உபாயம் இல்லை என்று அறிந்த இக் குலசேகர கவி, அந்தப் பகவானையே பல நாமங்களைச் சொல்லிக் கூப்பிட்டு, அவருடைய ஆபிமுக்யத்தைப் பெறுவதற்குறிய அத்யவஸாயத்தைக் கைப்பற்றுகிறார் இங்கே.

नमामि नारायणपादपङ्कजं करोमि नारायणपूजनं सदा ।
वदामि नारायणनाम निर्मलं स्मरामि नारायणतत्त्वमव्ययम् ॥

38. நமாமி நாராயணபாதபங்கஜம்
கரோமி நாராயணபூஜநம் ஸதா,
வதாமி நாராயணநாம நிர்மலம்
ஸ்மராமி நாராயணதத்வமவ்யயம்.

நாராயணனின் சரண கமலத்தை நமஸ்கரிக்கின்றேன். நாராயணனின் பூஜைகளை எப்பொழுதும் செய்கின்றேன். 'நாராயணா' என்னும் மாசற்ற நாமத்தைச் சொல்லுகின்றேன். நாராயணனுடைய விகாரமற்றதான யதார்த்த நிலையைக் கருதுகின்றேன்.

கரோமி, வதாமி, ஸ்மராமி, என்பதால் காயிக-வாசிக-மானஸிகமாய் உள்ள பூஜனம், கீர்த்தனம், ஸ்மரணம் இவை அனைத்தையும், நாராயண ஸம்பந்தமுள்ளவையாக்கி, நமாமி என்பதால் அவற்றாலுண்டான பலத்தின் ஸமர்ப்பணமும் அவர் திருவடிகளிலேயே என்று சொல்லப்படுகிறது.

श्रीनाथ नारायण वासुदेव श्रीकृष्ण भक्तप्रिय चक्रपाणे ।
श्रीपद्मनाभाच्युत कैटभारे श्रीराम पद्माक्ष हरे मुरारे ! ॥ ३९ ॥

39. ஸ்ரீநாத நாராயண வாஸுதேவ
ஸ்ரீக்ருஷ்ண பக்தப்ரிய சக்ரபாணே,
ஸ்ரீபத்மநாபாச்யுத கைடபாரே
ஸ்ரீராம பத்மாக்ஷ ஹரே முராரே!

अनन्त वैकुण्ठ मुकुन्द कृष्ण गोविन्द दामोदर माधवेति ।
वक्तुं समर्थोऽपि न वक्ति कश्चित् अहो जनानां व्यसनाभिमुख्यम्॥

40. அநந்த வைகுண்ட முகுந்த க்ருஷ்ண
கோவிந்த தாமோதர மாதவேதி,
வக்தும் ஸமர்த்தோ'பி ந வக்தி கச்சித்
அஹோ ஜநாநாம் வ்யஸநாபிமுக்யம்.

என்ன ஆச்சர்யம்! ஜனங்களெல்லாம் இப்படிக் குத் தங்கள் தீமைகளை எதிர்கொண்டு அழைக்கின்றார் களே! ஸ்ரீநாத என்று தொடங்கி, மாதவ என்று முடி வாகியுள்ள மேல் சுலோகங்களில் உள்ள பகவந்நாமங் களைச் சொல்லும் சக்தியைப் பெற்றிருந்தும், அவற்றை ஒருவருமே சொல்லாது ஒழிக்கின்றனரே.

நாராயணேதி நாமாஸ்தி வாகஸ்தி வசவர்த்திநீ,
ததா'பி நரகே கோரே பதந்தீதி தத்புதம்.

"நாராயண என்னும் நாமம் ஸர்வ ஸாதாரணமாயி யிருக்க, அதைச் சொல்லக்கூடிய வாக்கும் ஸஹஜ மாய் அனைவர்க்கும் இருக்க, இவ்வாறு பலரும் நரகம் செல்லும் விந்தைதான் விந்தை" என்றுள்ள வ்யா ஸஸூக்தியின் விவரணமாக இந்த ச்லோகமும், இத் துடன் ஏகான்வயமாய் இருக்கும் முன் ச்லோகமும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ध्यायन्ति ये विष्णुमनन्तमव्ययं हृत्पद्ममध्ये सततं व्यवस्थितम् ।
समाहितानां सतताभयप्रदं ते यान्ति सिद्धिं परमां च वैष्णवीम् ॥

41. த்யாயந்தி யே விஷ்ணுமநந்தமவ்யயம்
ஹ்ருத்பத்மமத்யே ஸததம் வ்யவஸ்திதம்,
ஸமாஹிநாநாம் ஸததாபயப்ரதம்
தே யாந்தி ஸித்திம் பரமாஞ்ச வைஷ்ணவீம்.

ஹ்ருதய புண்டரீகத்தில் எப்போதும் நியதமாய் வஸிப்பவனும், தன்னிடத்தில் மனத்தைச் செலுத்துகிறவர்களுக்கு அபயப்ரதானம் செய்பவனும், ஸர்வ வ்யாபியும், விகார சூன்யனுமாய் உள்ள அனந்தனை எவர்கள் தியானிக்கின்றனரோ, அவர்கள் ஒப்புயர் வற்ற வைஷ்ணவஸித்தியை, அதாவது மோக்ஷத்தைப் பெறுகிறார்கள்.

அர்ஜுனனைப்போல் தாமும் ஒரு சிறந்த பக்தரென்று தம்மை இக்குலசேகரர் மிகப்பெருமையுடன் அபிமானித்துக் கொண்டு 'கௌந்தேய ப்ரதிஜாநீஹி' என்கிற முறையைத் தழுவி, பகவத்—த்யானம் செய்கிறவர்கள் நிச்சயம் பரமபதம் அடைவார்கள் என்று இக் கவி இங்கே ப்ரதிஜ்ஞை செய்கிறார்.

क्षीरसागरतरङ्गशीकरासारतारकितचारुमूर्तये ।
भोगिभोगशयनीयशायिने माधवाय मधुविद्विषे नमः ॥ ४२ ॥

42. க்ஷீர ஸாகர தரங்க சீகரா—
ஸார தாரகித சாருமூர்த்தயே,
போகிபோக சயநீயசாயிநே
மாதவாய மதுவித்விஷே நம:.

பாற்கடலின் அலைத் துளிகளால் நக்ஷத்திரங்களை யுடையதுபோல் அழகிய திருமேனியை உடையவனும்

பாம்பின் உடலையே படுக்கையாய்க் கொண்டு அதில் நித்திரை செய்பவனும், மது என்ற அசுரனைக் கொன்றவனுமான மாதவனின் பொருட்டு நமஸ்காரம்.

இந்த ச்லோகத்தால் 'சாந்தாகாரம் புஜகசயநம்' என்றவாறு சாந்தரஸம் நிரம்பப் பெற்ற பகவத் ஸ்வரூபத்திலே 'நம:' என்று ஆத்ம நிக்ஷேபம் செய்கிறார் இந்த பக்தகவி; இந்த 'ஆத்ம நிக்ஷேபம்' என்பது 'நான் எனக்குரியவனல்லேன், பகவானுக்கே உரியவன்' என்று தன்னைப் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணும் ப்ரகாரத்தை அறிவிக்கும் சரணாகதியின் அங்கங்களில் முக்யத்வம் பெற்றது.

आश्चर्यमेतद्धि मनुष्यलोके सुधां परित्यज्य विषं पिबन्ति ।
नामानि नारायणगोचराणि त्यक्त्वाऽन्यवाचः कुहकाः पठन्ति ॥

43. ஆச்சர்யமேதத்தி மநுஷ்ய லோகே
ஸுதாம் பரித்யஜ்ய விஷம் பிபந்தி,
நாமாநி நாராயணகோசராணி
த்யக்த்வா'ந்யவாச: குஹகா: படந்தி.

இம்மானிட உலகத்தில் இது ஒரு புதுமை! (என்னவென்றால்) கபட ஸ்வபாவமுடையவர்கள் ஸ்ரீமந் நாராயணனைக் குறிக்கும் நாமங்களை விட்டு மற்றப் பேச்சைப் பேசுகிறார்கள். இது அமிர்தத்தை விட்டொழித்து விஷத்தை அருந்துவது போலிருக்கிறது.

लाटीनेत्रपुटीपयोधरघटीरेवातटीदुष्कुटी-
पाटीरद्रुमवर्णनेन कविभिर्मूढैर्दिनं नीयते ।
गोविन्देति जनार्दनेति जगतां नाथेति कृष्णेति च
व्याहारैः समयस्तदेकमनसां पुंसामतिक्रामति ॥ ४४ ॥

44. லாடநேத்ரபுடபயோதர—
கடரேவாதடதுஷ்குட—
பாடரத்ருமவர்ணநேந கவிபிர்
மூடைர்திநம் நீயதே,
கோவிந்தேதி ஜநார்தநேதி ஜகதாம்
நாதேதி க்ருஷ்ணேதி ச
வ்யாஹாரை: ஸமயஸ்
ததேகமநஸாம் பும்ஸாமதிக்ராமதி.

லாடதேசப் பெண்களுடைய கண்களையும் ஸ்தனங்களையும், ரேவை நதிக்கரையிலுள்ள அற்பக்குடிசைகள் சந்தனவிருக்ஷம் முதலிய இவற்றையும் வர்ணித்துக் கொண்டு மூடர்களான கவிகள் நாளைக் கழிக்கிறார்கள். பகவான் ஒருவனிடத்திலேயே மனத்தை வைத்த மனுஷ்யர்களுக்கோ "கோவிந்தா! ஜநார்த்தனா! ஜகந்நாதா! கிருஷ்ணா!" என்கிற கீர்த்தனங்களால் அந்நாட்கள் செல்லுகின்றன.

अयाच्यमक्रेयमयातयाममपाच्यमक्षय्यमदुर्भरं मे ।
अस्त्येव पाथेयमितः प्रयाणे श्रीकृष्णनामामृतभागधेयम् ॥ ४५ ॥

45. அயாச்யமக்ரேயமயாதயாமம்
அபாச்யமக்ஷய்யபதுர்பரம் மே,
அஸ்த்யேவ பாதேயமித: ப்ரயாணே
ஸ்ரீக்ருஷ்ணநாமாம்ருத பாகதேயம்.

யாச்ஞை, க்ரயம் இவற்றுக்கு அவசியமில்லாததாயும், ஸதா ரஸத்துடன் கூடிக்கொண்டிருப்பதாயும், சமைக்கப்படவேண்டிய அவச்யமற்றதாயும், குறைவில்லாததாயும், தூக்குவதற்கெளிதாகி லோகயாத்திரைக்கு உற்றதோர் உணவு ஒன்று இருக்கிறது. (அது யாதெனில்) ஸ்ரீகிருஷ்ணனுடைய நாமாம்ருதமாகிற செல்வமேதான்.

यस्य प्रियौ श्रुतधरौ कविलोकवीरौ
मित्रे द्विजन्मवरपारशवावभूताम् ।
तेनाम्बुजाक्षचरणाम्बुजषट्पदेन
राज्ञा कृता कृतिरियं कुलशेखरेण ॥ ४६ ॥

46. யஸ்ய ப்ரியௌ ச்ருததரௌ கவிலோகவீரௌ
மித்ரே த்விஜந்மவர பாரசவாவபூதாம்,
தேநாம்புஜாக்ஷசரணாம்புஜஷட்பதேந
ராஜ்ஞா க்ருதா க்ருதிரியம் குலசேகரேண.

ஒருவர் ப்ராஹ்மண ஜாதியிலும், மற்றவர் மிச்ரவர்ணத்திலும் ஜனித்து மிகப் படித்தவர்களும் கவிச்ரேஷ்டர்களுமான இரண்டு அன்பார்ந்த நண்பர்கள் எவருக்கு இருந்தார்களோ, தாமரைக் கண்ணனை ஸ்ரீ முகுந்தனுடைய திருவடித் தாமரைகளை வண்டுகளைப்போல் ஆச்ரயிப்பவரான அந்தக் குலசேகரர் என்ற அரசரால் இந்தப் பிரபந்தம் இயற்றப்பெற்றது.

॥ इति श्रीमुकुन्दमालास्तोत्रं सम्पूर्णम् ॥

ஸ்ரீ முகுந்தமாலைத் தோத்திரம் முற்றும்: சுபம்.

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—60 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... | 0—60 |
| 3. | ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—60 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்க்ருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... | 2—50 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... | 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... | 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்க்ருதத்தில் .... .... | 0—40 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும் .... .... | 0—40 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணனம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... | 1—50 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்த்ர கலா ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... | 0—50 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... | 1—00 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1